புதுக்கோட்டை மாவட்டத்தில் கல்கி—II

KALKI 25.1.87 ரூ. 1.50

# கல்கி

## மூடிய மில்களும் பட்டினி கிடக்கும் தொழிலாளர்களும்



# சுளுக்கு இவனது துடிப்பான நாளைப் பாழாக்க விடலாமா?




# உங்கள் கைகளிலேயே குணப்படுத்தும் சக்தி

பாசமிக்க மென்மையான உங்கள் கைகளின் ஸ்பரிசம், கூடவே குணப்படுத்தும் சக்திமிக்க அயொடெக்ஸ்—இவனுக்குத் தேவை. எனவே கைவசம் இருக்கட்டும் அயொடெக்ஸ். ஏனெனில் பாதிக்கப்பட்ட திசுக்களைக் குணப்படுத்தும் அயொடின் மற்றும் வலி தணிக்கும் மீத்தைல் ஸலிஸிலேட் கொண்ட பாம் அயொடெக்ஸ்.

**அயொடெக்ஸ் இருமுறை தினம் தடவ இரு மடங்கு குணம்**

வலி தணியும்வரை, தினம் இருமுறை அயொடெக்ஸ் தடவ டாக்டர்கள் பரிந்துரைக்கின்றனர்... பின்னரும் இரு தினங்கள்...ஏனெனில், வலி ஒரு அடையாளம் மட்டுமே. நிஜமான பிரச்சினை திசுக்களின் உள்ளார்ந்த பாதிப்பு.

எனவே உமது அன்பிற்குரியவருள் யாரேனும் சுளுக்கு, தசைப்பிடிப்பு, மூட்டுகோவு, உடல் வலி இவற்றால் துன்புற்றால் அயொடெக்ஸ் தடவித் தேயுங்கள். தினம் இருமுறை. இரு மடங்கு வேகமாக அவர்கள் தத்தம் வேலைகளை கவனிக்கத் தொடங்குவர், உங்களை அன்போடு நினைப்பார்கள்.

**அயொடெக்ஸ்®– குணப்படுத்தும் சக்திகொண்ட பாம்**

SKF —ஓர் எஸ்கேஎஃப் தயாரிப்பு.

ELL-1509



# எம்.ஜி.ஆரின் நண்பரென்றால் இத்தனை சலுகைகளா?

கடந்த 85— ஆகஸ்ட் மாதம், தமது உடல்நிலையைப் பரிசோதித்துக் கொள்வதற்காக அமெரிக்கா சென்ற முதல்வர் எம்.ஜி. ஆர்., அங்கு வாழும் இந்தியர்களிடம், குறிப்பாகத் தமிழர்களிடம், தமிழ்நாட்டில் சுற்றுலாத் துறைக்கு ஊக்கம் அளித்திட வெளிநாட்டில் வாழும் தமிழர்கள் உதவ வேண்டும் என்றும் சுற்றுலா சம்பந்தப்பட்ட தொழில்கள் துவங்க வேண்டுமென்றால் அரசு பரிபூரண ஆதரவு வழங்குமென்றும் பேசினார்.

முதலமைச்சரின் இந்த அறிவிப்பைக் கைதட்டி வரவேற்றவர்களில்ஒருவர், டாக்டர் பழனி ஜி. பெரியசாமி. யார் இந்தப் பழனி ஜி. பெரியசாமி? பெரும்பாலான தமிழர்களுக்குத் தெரிந்த பெயர்தான்.

84—ல் எம்.ஜி. ஆர். உடல்நிலை மோசமானபோது, அமெரிக்காவில் சிகிச்சை அளித்தார்கள் அல்லவா, அப்போது அது சம்பந்தமான வேலைகளில் ஒரு பாலமாகச் செயல்பட்டவர். பல பேர் அவரை மருத்துவ டாக்டர் என்று நினைத்திருக்கிறார்கள். ஆனால் அது தவறு.

எம்.ஜி. ஆரின் இந்த அறிவிப்பைத் தொடர்ந்து பழனி ஜி. பெரியசாமியும் சில வெளிநாட்டில் வாழும் தமிழர்களும் (இவர்கள் யார் என்று தெரியவில்லை) சென்னை வந்தார்களாம். சுற்றுலாத் துறை வளர்ச்சியடைய ஒரு ஹோட்டலும், அதிசய உலகமும் கட்ட இடம் பார்த்தார்களாம். ஹோட்டல் கட்ட அவர்களுக்குப் பிடித்த இடம் தற்போது கண்ணப்பர் திடலுக்கு அருகில் உள்ள நாற்பத்தியொரு கிரவுண்டு நிலம் (சர்வே நெ: 1267.) அதிசய உலகம் அமைக்கத் தேர்ந்தெடுத்த இடம் சர்வே நெம்பர் 1268 (பழைய மிருகக் காட்சி சாலை.) ஆறே கால் கோடி ரூபாய்க்கு ஒரு திட்டத்தை அளித்து, தமிழ்நாடு அரசும் சுற்றுலாத் துறை மூலமாக இந்தத் திட்டத்தில் பங்கு கொள்ள வேண்டுமென்றும் கூட்டுத் துறையில்தான் இதை ஆரம்பிக்க வேண்டும் என்றும் கூறினார்களாம்.

திட்டத்தை அளித்தவர் எம்.ஜி. ஆரின் நண்பராயிற்றே! தமிழக சுற்றுலாத் துறை சுறுசுறுப்பாக வேலை செய்தது. இதன் விளைவு கடந்த 2.7.86 அன்று ஓர் அரசு ஆணை போடப்பட்டது. டாக்டர் பெரியசாமியும் அவரது கூட்டாளிகளும் ஆரம்பித்துள்ள பல்லவா ஹோட்டல் கார்ப்பொரேஷன் என்ற கம்பெனியுடன் சேர்ந்து கொண்டு தமிழக அரசின் சுற்றுலாத்துறை, கண்ணப்பர் திடல் அருகில் ஹோட்டல் ஒன்று கட்டும் என்றும், அதற்கான நிலங்களை அரசு ஒதுக்கித் தரும் என்றும் கூறி பல்வேறு சலுகைகளை வாரி வழங்கியிருக்கிறது. அந்த அரசு ஆணையில்தான் எவ்வளவு ஓட்டைகள்!

* இவர்கள் ஹோட்டல் கட்டுவதற்குத் தேர்ந்தெடுத்த இடம் ஏற்கெனவே இந்திய அரசின் சுற்றுலாத் துறைக்கு ஹோட்டல் கட்ட ஒதுக்கப்பட்டது. ஆனால் இப்பகுதியின்

புழுதியிலும், சப்தத்திலும், சுகாதாரமற்ற சூழ்நிலையிலும் ஹோட்டல் அமைப்பது சாத்தியமில்லை என்று கருதி இந்திய அரசின் சுற்றுலாத் துறை 'வேண்டாம்' என்று இந்த இடத்தை ஒதுக்கிவிட்டது. அப்படி மத்திய அரசின் சுற்றுலாத் துறையால் வேண்டாம் என்று ஒதுக்கப்பட்ட இடம் பெரியசாமி குழுவினருக்கு ஹோட்டல் அமைக்க மிகவும் 'ஐடியலாக'த் தோன்றுவது அதிசயம்தான்!

* வேப்பேரிப் பகுதியில் ஒரு கிரவுண்டின் விலை நிச்சயம் ஐந்து லட்சம் இருக்கும். ஹோட்டல் கட்ட 41 கிரவுண்டும், அதிசய உலகம் கட்ட 12.5 ஏக்கரும் அரசு குத்தகைக்காகக் கொடுக்கப் போகும் இடத்திற்கு, மார்க்கெட் மதிப்பாக ஒரு கிரவுண்டிற்கு ஒன்றே கால் லட்சம் வீதம் நிர்ணயித்துள்ளார்கள். குத்தகைக்குத்தானே என்று ஒதுக்கிவிட முடியாது. காரணம், இந்தக் குறைந்த மதிப்பீட்டின் அடிப்படையில்தான், குத்தகைப் பணமும் ஏக்கர் ஒன்றுக்கு ஆண்டொன்றுக்கு ஆயிரம் ரூபாய் மட்டுமே என்று மிகக் குறைவாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. மேலும் மிக நீண்ட காலத்துக்குக் குத்தகைக்கு அளிக்கப்பட்டுள்ளது.

* டாக்டர் பெரியசாமியின் பல்லவ ஹோட்டல் கார்ப்பொரேஷன் ஒரு கடிதத்தில் கூறியுள்ள யோசனைப்படி 6.25 கோடி மதிப்புள்ள இந்தத் திட்டத்துக்குச் சுற்றுலாத் துறையும் பல்லவா ஹோட்டல் கார்ப்பொரேஷனும் போடப் போவது 2.05 கோடிதான். மீதி 4.20 கோடியை வங்கியோ, அல்லது வேறு அரசு நிதி நிறுவனங்களோ கடனுகத் தரவிருக்கிறது. முதலில் குறிப்பிட்ட 2.05 கோடி முதலீட்டில் 90 சதம் பல்லவா ஹோட்டல் கார்ப்பொரேஷன் பங்குதாரர்கள் ஏற்பார்கள். மிச்சமுள்ளதை தமிழ்நாடு சுற்றுலா வாரியம் முதலீடு செய்யும். பொதுவாக கூட்டுத்துறை என்றல் முதலீட்டில் 26 சதவீதம் பங்குகளை அரசு ஏற்கும். 25 சதவீதம் கம்பெனியை நடத்தும் பொறுப்பேற்கும் தனியார் முதலீடு செய்ய வேண்டும். மீதி 49 சதவீதத்துக்கான பங்குகள் பொதுமக்களுக்கு விநியோகிக்கப்பட்டு அவர்களிடமிருந்து பெறப்பட்ட பண

டாக்டர் பெரியசாமி :

# "குறுகிய கண்ணோட்டம் வேண்டாமே!"



டாக்டர் பெரியசாமி

**ப**ல்லவா ஹோட்டல் மற்றும் அதிசய உலகம் திட்டங்களை 'முடுக்கி' விடுவதற்காகச் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தார் டாக்டர் பழனி ஜி. பெரியசாமி. இவரும் அயல்நாட்டு இந்தியர்கள் சிலரும் சேர்ந்து, அரியலூர் அருகே தரணி சிமெண்ட்ஸ் என்னும் தொழிற்சாலையையும் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

''இந்தியாவுக்கு வந்து ஏழு நாட்கள் ஆகிவிட்டன. இன்னும் என் அம்மாவைக் கூடப் பார்க்கவில்லை; அத்தனை வேலை'' என்று ஆரம்பித்தார் டாக்டர் பெரியசாமி.

''எனக்கு அமெரிக்காவில் ஏழு நிறுவனங்கள் இருக்கின்றன. ரியல் எஸ்டேட், ஷாப்பிங் சென்டர், ஹோட்டல் போன்று பல்வேறு நிறுவனங்களை நடத்தி வருகிறேன். இது தவிர நான் ஒரு முழு நேரப் பொருளாதாரப் பேராசிரியர். முதல்வர் எம்.ஜி. ஆர். அமெரிக்கா வந்திருந்த போது ஃப்ளோரிடாவில் உள்ள அதிசய உலகத்தைக் கண்டு, அதைப் போல் தமிழ்நாட்டில் ஒன்று அமைக்க வேண்டுமென்று விரும்பினர். என்னிடமும் என் நண்பர்களிடத்திலும் அவர் விருப்பத்தை வெளிப்படுத்தினர். அவர் கொடுத்த ஊக்கத்தில் தான் இந்தத் திட்டங்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன.''

''நீங்கள் ஹோட்டல் கட்டத் தேர்ந்தெடுத்த இடம் ஏற்கெனவே இந்திய சுற்றுலாத் துறையால் நிராகரிக்கப்பட்ட ஓர் இடம் என்று உங்களுக்குத் தெரியுமா?''

''எம்.ஜி. ஆர். அவர்கள் வட சென்னையில்தான் அதிசய உலகம் அமைய வேண்டுமென்று விரும்பினர்கள். ஹோட்டலையும் அதன் அருகில் கட்டுவது என்று முடிவாயிற்று. இந்திய சுற்றுலாத் துறை 'லாபம்' என்ற நோக்கத்தை வைத்து ஹோட்டல் திட்டத்தை அணுகி, பின்னர் சரிப்பட்டு வராது என்று ஒதுங்கியிருக்கும். எங்களுக்கும் லாபம் சம்பாதிக்கும் ஆசை உண்டு. ஆனல் புழுதியும் சுகாதாரமற்ற இரைச்சலும்

மாக இருக்க வேண்டும். இந்த நடைமுறை விதி இந்த ஹோட்டல் விஷயத்தில் மீறப் படுகிறது. அரசுக்குப் பத்து சதவீதம் பங்குகள்தான் ஒதுக்கப்படுகிறது.

* இதுவரை டாக்டர் பழனி பெரியசாமியின் பெயர்தான் வெளியில் வந்திருக்கிறதே தவிர, இந்தத் திட்டத்தில் பங்கேற்கும் வேறு அயல்நாட்டு இந்தியர்கள் யார் என்று தெரியவில்லை. இவ்வளவு பெரிய முதலீட்டுடன் ஆரம்பிக்கப் போகும் திட்டங்களில், பங்கேற்பவர்கள் ஹோட்டல் தொழிலில் அனுபவமுள்ளவர்களா என்பதும் தெரியவில்லை.

* இவர்கள் அதிசய உலகம் அமைக்க இருக்கும் இடம் சென்ட்ரல் புறநகர் ரயில் நிலையத்தை ஒட்டி இருக்கும் இடம். பிற்காலத்தில் ரயில்வே தனது விஸ்தரிப்புக்கு அந்த இடத்தைக் கேட்டாலும் ஆச்சர்யப் படுவதற்கில்லை. அப்படிப்பட்ட ஓர் இடத்தில் இவ்வளவு செலவில் ஓர் அதிசய உலகம் அமைக்க வேண்டுமா? திட்டமே அதிசயமாகத்தான் இருக்கிறது.

—இந்தத்திட்டங்களின்மேல்தமிழகஅரசுக்குத்தான் எவ்வளவு கரிசனம் என்று பாருங்கள். இந்தத் திட்டங்களின் முன்னேற்றம் எப்படியிருக்கிறது என்பது பற்றி ஒவ்வொரு மாதமும் சுற்றுலாத் துறை இயக்குனர் அரசுக்கு ஒரு ரிப்போர்ட் அனுப்ப வேண்டும் என்று அரசு ஆணை கட்டளையிடுகிறது.

இவ்வளவு சலுகைகளும் வெளிநாட்டில் வாழும் இந்தியர்கள் இங்கு தொழில் துவங்க உதவுகிறோம் என்ற பெயரில் அளிக்கப்பட்டுள்ளது. மேல்நாட்டில் வாழும் இந்தியர்கள் இங்கு தொழில் துவங்க வேண்டுமென்றால் ரிஸர்வ் வங்கியிடம் அனுமதி பெற வேண்டும். இந்தத் திட்டங்கள் இன்னும் ரிஸர்வ் வங்கியின் அங்கீகாரத்தைப் பெறவில்லை. இது இன்னொரு ஸ்வராஜ் பால் விவகாரம் போலாகி, சர்ச்சைக்கும் ஊகங்களுக்கும் இடமளித்துவிடக் கூடாது என்பதால் ரிஸர்வ் வங்கி எச்சரிக்கையுடன் செயல்படட்டும்.

— நமது நிருபர்

---

உள்ள அந்தப் பகுதியை மிகவும் ரம்மியமாக மாற்ற முடிவு செய்துள்ளோம். இதற்காகவே 6.25 கோடியிலிருந்த முதலீட்டுத் தொகை 17 கோடியாக அதிகரிக்கப்பட்டிருக்கிறது! நாங்கள் நினைக்கும் அளவுக்குத் திட்டங்கள் முழுமையாக நிறைவேற்றப்பட்டால் கண்ணப்பர் திடலா, கொடைக்கானலா என்று சந்தேகம் வரும்! அந்த அளவுக்கு மரங்களை வளர்த்து நிலப் பகுதியை ஒழுங்கு படுத்தப் போகிறோம்!''

''சென்ட்ரல் புறநகர் ரயில்வேயை விரிவுபடுத்தும்போது உங்கள் அதிசய உலகத்தின் பெரும்பகுதி பாதிக்கப்படுமே!''

''ஆமாம்! ஆனால் அதைக் கணக்கில் எடுத்துக் கொண்டால் கூட நிறைய இடம் இருக்கும்.''

''இருக்கலாம். ஆனால் நிறைய முதலீடு செய்து நீங்கள் அபிவிருத்தி செய்த பகுதி பாதிக்கப்படுமே! இப்படியொரு 'ரிஸ்க்' தேவைதானா?''

''. . . . . . . . . . .''

''நகரின் மையப் பகுதி அது. நிச்சயம் ஒரு கிரவுண்டின் விலை ஐந்து லட்சமாவது இருக்கும். ஆனால் ஒரு கிரவுண்டின் மதிப்பு 1.25 லட்சம் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளதே?''

''ரியல் எஸ்டேட்காரர்களுக்கு விற்றால் ஐந்து லட்சம் கொடுத்து வாங்கிப் பெட்டி பெட்டியாக வீடுகளைக் கட்டிவிடுவார்கள். ஆனால் அந்தப் பகுதியின் சுற்றுப்புறச் சூழலையே மாற்றி மாசற்ற தன்மையை ஏற்படுத்தும் அளவுக்கு எங்கள் திட்டங்கள் போடப்பட்டுள்ளன. இதை நீங்கள் வியாபாரக் கண்ணோட்டத்தில் பார்க்கக் கூடாது.''

''அரசின் ஆணையில் உங்கள் பெயர்தான் குறிப்பிட்டுள்ளதே தவிர, மற்ற பங்குதாரர்கள் யார் என்று தெரியவில்லையே?''

''என்னுடன் 27 பேர் இந்தத் திட்டத்தில் இணைந்திருக்கிறார்கள். முதலில் நாங்கள் 90 சதவீதமும் அரசு பத்து சதவீதமும்தான் பங்கு போடுவதென்று முடிவானது. ஆனால் 30.10.86 அன்று அரசு ஒரு கடிதத்தின் மூலம் அரசின் பங்கு 26 சதவீதம், எங்கள் பங்கு 25 சதவீதம், மீதி 49 சதவீதம் பொதுமக்கள் பங்கு என்று வரையறுத்திருக்கிறது. ரிஸர்வ் வங்கி 20.8.86 அன்று நாங்கள் (NRI) முதல் கட்டமாக 40 லட்ச ரூபாயை இந்தியாவுக்குள் கொண்டுவர அனுமதித்திருக்கிறது. மேலும் பணம் கொண்டு வர ரிஸர்வ் வங்கிக்கு மேல் மற்றொரு அதிகாரி இருக்கிறார். (Controller of Capital Issues.) அவரிடம் அனுமதி கேட்டிருக்கிறோம். எனக்கு முதல்வர் வேண்டியவர் என்பதால் முறையற்ற விதத்தில் சலுகைகள் பெற நான் விரும்பவில்லை. எல்லாம் மக்கள் மன்றத்தில் வைக்கப்பட்டு அங்கீகாரம் பெற வேண்டும் என்று கருதுகிறேன். இதைக் குறுகிய கண்ணோட்டத்தில் பார்க்காதீர்கள். இன்றைக்குக் குஜராத்திலும், கர்நாடகாவிலும் அயல்நாட்டில் வாழும் இந்தியர்கள் முதலீடு செய்து, ஏராளமான தொழில்கள் துவங்கப்பட்டுள்ளன. தமிழக மக்களும் இது போன்ற திட்டங்களை வரவேற்றால்தான் எங்களுக்கும் முதலீடு செய்ய உற்சாகம் வரும்.

பேட்டி: கௌசல்யா

# ஆயிரக் கணக்கான ரூபாய்களை அபேஸ் செய்த ஏஜென்ஸி!

• சதர்ன் டிரேடிங் ஏஜென்ஸி



'கடந்த ஆண்டு [illegible] மாதக் கடைசி வாரத்தில், ஔரங்காபாத் (மகாராஷ்டிர மாநிலம்)தில் உள்ள ஆனந்தா லாட்ஜில் வி. ராமநாதன் என்பவர் வந்து தங்கியிருந்தார். அவர், புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள கொப்பனாப்பட்டி எனும் ஊரிலிருக்கும் 'சதர்ன் டிரேடிங் ஏஜென்ஸீஸ்' (1—33 சாலை வீதி) என்ற நிறுவனத்தின் பிரதிநிதி என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். தங்கள் ஏஜென்ஸி மூலம் ஸ்டீல் பீரோ, டீ.வி., கிரைண்டரிலிருந்து வீட்டுக்குத் தேவையான அத்தனை பொருள்களையும்தவணை முறையில்தருவதாகச்சொன்னார். இந்தத் திட்டத்தைத் தங்கள் ஏஜென்ஸி அனைத்திந்திய அளவில் விஸ்தீரணப்படுத்தும் நோக்கில் தம்மைப் போன்ற இன்னும் பலபிரதிநிதிகள் உத்திரப்பிரதேசம், மத்தியப் பிரதேசம், பீகார், ஒரிஸா போன்ற மாநிலங்களுக்குச் சென்றிருப்பதாகவும் கூறினார். நாங்களும் நம்பிவிட்டோம்.

'அதனால் இங்குள்ள நூற்றுக்கணக்கான தமிழர்களும், மற்ற மாநில நண்பர்களும் அந்தத் தவணை முறைத் திட்டத்தின் முன் பணமாக ஆளுக்கு நூறு, இருநூறு என்று ஆயிரக்கணக்கான ரூபாய்களைக் கட்டினோம். அவற்றுக்கெல்லாம் அவர் ரசீதும் தந்தார். ஆயிரத்தில்பத்துப்பேருக்குப்பொருள்களும் தபால் மூலம் (V.P.P.L.) வந்து சேர்ந்தன.

'இச்சமயத்தில் (ஆகஸ்ட் இறுதியில்) வி. ராமநாதன் என்ற அந்தப் பிரதிநிதி ஒரு சில அவசர அலுவல்கள் காரணமாகத் தாம் சென்னைக்குச் செல்ல வேண்டியிருப்பதாகவும், அவற்றை முடித்துக்கொண்டு விரைவில் மீண்டும் வந்துவிடுவதாகவும் கூறிவிட்டுப் புறப்பட்டுச் சென்றுவிட்டார். இதுவரை அவரைப் பற்றிய தகவலே இல்லை. சிலருக்கு **V.P.P.L.** மூலம் பொருள்கள் அனுப்பப்பட்டிருப்பதாக அந்தக் கம்பெனியி



லிருந்து கடிதங்கள் வந்தாலும் பொருள்கள் வந்து சேரவில்லை. காரணம் கேட்டு அக்கம்பெனி உரிமையாளர் என்று சொல்லப்படும் திருமதி சரோஜா சந்தானம் என்பவருக்குப் பல கடிதங்கள் எழுதியும் பதில் இல்லை.

'எனவே, கல்கியின் சமுதாயப் பணியில் இதை எடுத்துக் கொண்டு, அக்கம்பெனி அங்கு உள்ளதா இல்லையா என்று ஆராய்ந்து கண்டுபிடித்து, பாதிக்கப்பட்ட எங்களுக்கு நீதி கிடைக்கவும், 'தமிழர்கள் என்றாலே

ஏமாற்றுப் பேர்வழிகள்தான்' என்று மற்ற மாநில நண்பர்கள் மத்தியில் ஏற்பட்டுவிட்ட களங்கத்தைத் துடைக்கவும் உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம்.'

— இப்படியொரு கடிதத்தை ஔரங்காபாத்திலிருக்கும் கல்கி வாசகர் ஆர். ஸ்ரீவத்ஸன் என்பவர் நமக்கு எழுதியிருந்தார். உடனடியாகப் புறப்பட்டுக் கொப்பனாப்பட்டிக்குச் சென்றோம். அங்கு அந்தக் கம்பெனி விலாசத்திற்குச் சென்று பார்த்த போது பூட்டிக் கிடந்தது. 'சதர்ன் டிரேடிங் ஏஜென்ஸீஸ்' என்ற போர்டு அறுந்துவிழுந்து கீழே கிடந்தது.

பக்கத்திலிருப்பவர்களை விசாரித்த போது, "ஏதோ ஓர் அம்மா வருவாக... போவாக... என்ன ஏதுன்னு கேட்டுக்கிட்டதில்லே. போஸ்ட் ஆபீஸுக்குத்தான் அடிக்கடி போவாக. அங்கு போய் (வி)சாரிச்சுப் பாருங்க...." என்றார்கள்.

போனோம். போஸ்ட் மாஸ்டரைச் சந்தித்தோம். 'சில பொருள்களை அவுங்க அனுப்பு வாங்க. எங்களுக்கும் ஏராளமான ஸ்டாம்ப்புங்க வித்ததால நாங்களும் அது பற்றிப் பெரிசா எடுத்துக்கலே. அவுங்களுக்கு நிறைய மணியார்டரும் வந்திருக்கு. கொடுத்திருக்கோம். ஆனால் கடந்த ரெண்டு மாசமாக் காணலே. என்ன ஏதுன்னும் புரியலே..."

"மணியார்டர், தபால்களெல்லாம் 'சதர்ன் டிரேடிங் ஏஜென்ஸீஸ்' என்ற பெயரில்தான் வந்திருக்கின்றன. அப்படியிருக்கும்போது அதன் ரிஜிஸ்தர் நெம்பர் போன்றவற்றையும் கம்பெனி உரிமையாளரைப் பற்றியும் விசாரிக்காமல் எப்படிக் கொடுத்தீர்கள்?"

"அந்த அம்மாவைப் பற்றி ஒண்ணும் தெரியாதுன்னாலும் அவுங்க ஆபீஸ் வெச்சிருந்த வீட்டுச் சொந்தக்காரர் சிங்காரம் செட்டியார்சொன்னாருங்க. அவரு உள்ளூர்க்காரர். அதனால்தாங்க கொடுத்தோம். அவரைப் போய் விசாரிங்க. தகவல் தெரிஞ்சா எங்களுக்கும் பிரயோஜனமா இருக்கும்" என்றார் போஸ்ட்மாஸ்டர்.

சிங்காரம் செட்டியார் வீட்டுக்குச் சென்றோம். "அவுக, இப்பத்தானே தோட்டத்துக்குப் போனாக. வந்திடுவாக. இருங்க. என்ன சேதியா வந்தீக?" என்றார் அவர் மனைவி ராமாயி ஆச்சி.

விஷயத்தைச் சொன்னோம். "அதையேன் கேக்கறீக? மூணு மாசமா அந்தம்மா வாடகையே தரலே. மாசம் முப்பது ரூவா தானே வாடகைன்னு செட்டியாரும் (வி)சாரியாம கொடுத்திட்டாக. அந்தம்மாவை நான் கண்ணாலகூடப் பார்த்ததில்லே..." என்றார்.

"சரி, நாங்கள் செட்டியாரைத் தோட்டத்திலேயே பார்த்துக் கொள்கிறோம்" என்று புறப்பட்டுச் சென்றோம். வழியிலேயே அகப்பட்டார் சிங்காரம் செட்டியார். ஆதியோடு அந்தமாக விஷயத்தைச் சொன்னோம்.

"இப்படிப்பட்ட ஃபிராடா அவுக? தெரியாமப் போச்சே! பக்கத்திலிருக்கிற

* பொருள்கள் வி.பி.பி.எல்.லில் அனுப்பப்பட்டு விட்டதாக எழுதப்பட்ட கடிதம்

SOUTHERN TRADING AGENCIES

[illegible]

Ref: [illegible] Date 21.4.1986.

To

Mr. T. [illegible],
Office of [illegible],
[illegible],
[illegible].

Dear Sir,

We are [illegible] pleased to inform you that today we have arranged to [illegible] a post parcel containing [illegible] to you. Please [illegible] a letter in receipt of the Parcel immediately for our satisfaction. Please introduce your friends and relatives to our Agent, and Join more and more as a member in our scheme. We hope that you will be fully satisfied in receipt of our consignment.

Thanking you,

Yours faithfully,
For SOUTHERN TRADING AGENCIES,

[illegible]

வேந்தன்பட்டி அக்ரஹாரத்தில்தான் இருக்கிறதாச் சொன்னாக. சரி, பக்கத்து ஊர் தானேன்னு நானும் வாடகைக்கு விட்டுட்டேன். போஸ்ட் ஆபீஸ்ல வர்ற லெட்டருங்களைத் தங்களுக்குத் தரச் சொல்லிச் சிபாரிசு பண்ணச் சொன்னாக. நானும், 'இவுக நம்ப வீட்டில்தான் குடியிருக்காக. இவுகளுக்கு வர்ற லெட்டர், மணியார்டரைக் கொடுத்திடுங்க'ன்னு போஸ்ட் மாஸ்டருகிட்டே சொன்னேன். இப்படிப் பண்ணிட்டாகளே! மூணு மாச வாடகை பாக்கிக்கு நானும் தேடிக்கிட்டுத்தான் இருக்கேன். ஆனா கெடைக்கலே. சரி, வாங்க பேங்க்ல ஏதும் அக்கவுண்ட் வெச்சிருக்காங்களான்னு பார்ப்போம்...." என்று அங்குள்ள 'பேங்க் ஆஃப் மதுரை'க்கு அழைத்துச் சென்றார் சிங்காரம் செட்டியார்.

அங்கு போய்ப் பார்த்ததில் அந்தக் கம்பெனி பெயரிலோ அல்லது சரோஜா சந்தானம் என்ற பெயரிலோ எந்தவிதமான அக்கவுண்ட்டும் இல்லே.

கடைசியில், "சரிங்க... வேந்தன்பட்டி எங்கேங்க இருக்கு? அங்கேயும் போய்த் தேடிப் பார்க்கிறோம்...." என்றோம்.

"பக்கத்திலேதாங்க. பத்து கிலோ மீட்டர். எனக்கு முதுகு வலி. இல்லேன்னா நானும் உங்களோடவே வந்திடுவேன்" என்று விடை கொடுத்து அனுப்பினார் அவர்.

வேந்தன்பட்டிக்குச் சென்றோம். அங்கிருந்த இரண்டு அக்ரஹாரங்களையும் அலசோ அலசென்று அலசினோம். சரோஜா சந்தானம் என்று ஒரு சிறுமியைக்கூட அங்கே கண்டு பிடிக்க முடியவில்லை. இதற்குமேல் நம்மால் என்ன செய்ய முடியும்? கலெக்டரிடம் சொல்லி, போலீஸ் துறையின் புலனாய்வை மேற்கொள்ளச் சொல்லியிருக்கிறோம். அவரும் நடவடிக்கை மேற்கொள்வதாக உறுதியளித்திருக்கிறார். தமிழக போலீஸாரும் இதைக் கண்டுபிடித்துப் பாதிக்கப்பட்டவர்களுக்கு நீதி கிடைக்க உதவுவார்கள் என்று மனப்பூர்வமாக நம்புகிறோம்.

— பிரின்ஸ்

# மூடிய மில்களும்



* மூடிக் கிடக்கும் நமண சமுத்திரம் மில்



* மூடிக் கிடக்கும் காவேரி மில்

# பட்டினி கிடக்கும் தொழிலாளர்களும்

"ஆயிப் பொண்ணு, ஆயிப் பொண்ணு...." மெல்லிய குரலில் மனைவியைக் கூப்பிட்டார் சாமிக்கண்ணு.

"என்னங்க....?" — ஆயிப் பொண்ணுவின் குரலும் ஏதோ கிணற்றுக்குள்ளிருந்து வருவது போல்தான் கேட்டது.

"மணி அரிசி வீட்டில இல்லேன்னு முந்தா நாளே சொல்லிட்டே. என்ன செய்யறது? இன்னிக்கு இ.எஸ்.ஐ.க்குப் போயாவது பணம் வாங்கி, அரிசி வாங்கிக்கிட்டு வர்றேன். பையை எடு...." — குடும்பத்தின் இரண்டு நாள் பட்டினி நெஞ்சை ரணமாக்கப் புறப்பட்டுப் போனார் சாமிக்கண்ணு.

ஆனால் இ.எஸ்.ஐ. ஆபீஸ் என்ன அத்தனை காருண்யமிக்கதா என்ன? 'உடனே வந்து பணம் வேணும்னு எப்படிய்யா கெடைக்கும்? அடுத்த திங்கட்கிழமை வா.... போ.... போ....' என்று விரட்டிவிட்டார்கள்.

'ஏற்கெனவே இரண்டு நாள் பட்டினி கிடக்கும் குடும்பத்தாருக்கு முன்பு, இன்றைக்கும் எப்படிச் சும்மா போய் நிற்பது?" என்ற அதிர்ச்சியில் அங்கேயே மயக்கமடைந்தவர்தான் சாமிக்கண்ணு. மூன்று நாட்கள் கோமா நிலையிலேயே இருந்து மூன்றாவது நாள் (21.11.86) காலமாகிவிட்டார் அவர்.

புதுக்கோட்டை அருகிலுள்ள காவேரி மில் மூடப்பட்டதால் ஏற்பட்ட முதல் பட்டினிச் சாவு இதுதான்.

ஆண்டி கருப்பையாவுக்கு நான்கு குழந்தைகள். பெரியவள் பார்வதிக்கு அப்படி இப்படியுமாகப் புரட்டிக் கல்யாணம் செய்து வைத்தாயிற்று. இன்னும் ஜோதி இருக்கிறாள். பள்ளியில் படிக்கும் மகன்கள் ரமேஷ், மோகன்.

காலையில் எழுந்ததும் மில்லுக்குப் போய் உற்சாகமாக வேலை செய்து, கைநிறைய ஊதியம், ஊக்க ஊதியம், போனஸ் என்று பெற்றுக் கொண்டு சந்தோஷமாகக் கழிந்த நாட்கள் உண்டு. அப்படிப்பட்ட நாட்களெல்லாம் இப்போது கனவாகிவிட்டன.

யூனியன் தலைவர்களைச் சந்திக்கும் போதெல்லாம் "என்னங்க.... ஏதாவது விடிவு காலம் வருமா?" என்று கேட்பார் கருப்பையா.

"கண்டிப்பா வரும் கருப்பையா...."

நம்பிக்கையை மனத்தில் ஏற்றிக் கொண்டு வாழ்ந்தார் கருப்பையா.

மில்லில் சம்பளம் கிடையாது. இ.எஸ்.ஐ.யில் சென்று பணம் வாங்கலாமென்றால் கசப்பான அனுபவங்கள். ஏற்கெனவே ரத்தக் கொதிப்பு. கடைசியில் கடந்த 8.12.86 அன்று 'ப்ரஷர்' அளவுக்கு மேல் ஏறி, ஆளையே குளோஸ் செய்துவிட்டது.

காவேரி மில் மூடப்பட்டதால் ஏற்பட்ட இரண்டாவது பலி இது.

திருச்சி — புதுக்கோட்டை சாலையில் புதுக்கோட்டைக்கு ஐந்து கி.மீ. முன்பாகவே



* புஷ்பராஜ், எம்.எல்.ஏ. * வைரமுத்து

ஓர் அம்புக்குறி காவேரி மில்லுக்கு வழி காட்டுகிறது. வானம் பார்த்த பூமியான புதுக்கோட்டை மாவட்டத்தில், குறைந்த பட்சம் ஆயிரம் பேருக்கு வேலை கொடுத்து வந்தது இந்த மில்.

நம்மைக் கண்டதும் கூட்டமாக ஓடி வந்தார்கள். சிவப்புத்துண்டுபோட்ட சி.ஐ.டி.யு.வின் தலைவர் வைரமுத்து, யூனியன் ஆபீஸுக்கு அழைத்துச் சென்றார். காரல் மார்க்ஸ், லெனின், ஸ்டாலின், சர்க்கரைச் செட்டியார் படங்களுக்குக் கீழே உட்கார்ந்து கொண்டு விலாவாரியாகப் பேச ஆரம்பித்தார்.

''1948—ல் சூர்ய நாராயணன் என்பவர், லோகநாத முதலியார், சி.ஆர்.சீனிவாசன், சம்சுதீன், சென்னியப்பராமசாமி முதலியார் ஆகியோரோடு சேர்ந்து ஆரம்பித்ததுதான் காவேரி மில். துவக்கத்தில் 2500 தொழிலாளிகள் வேலை செய்த மில் இது.



* சோகத்தின் சுமை குறையாத ஆண்டிக் கருப்பையா குடும்பம்

அப்போது 32,000 தறிகள் இயங்கின.

''1967—ல் மில்லைத் தொடர்ந்து நடத்த முடியாது என்று சூரிய நாராயணன் குழுவினர் கூறிவிட, பிறகு தேவராஜுலு நாயுடு எடுத்து நடத்தினர். அவர் மேலும் மேலும் கடன்தான் வாங்கினாரே தவிர, வேறு ஒரு முன்னேற்றமும் இல்லை. பின்னர் கருமுத்து தியாகராசசெட்டியார்எடுத்துக்கொண்டார். தொழிலாளர்களுக்கு உண்மையிலேயே சோதனைக்காலம்தான் அது. சம்பள வெட்டு, கட்டாய ஒய்வு என்ற நிர்ப்பந்தங்களுக்குப் பிறகு அவரும் கைவிட்டுவிட்டார். பின்னர் மேட்டூர் பேர்ட்ஷெல் கம்பெனி எடுத்து நடத்தி மில்லின் மேல் ஏகப்பட்ட கடன் பாரத்தை ஏற்றிவிட்டு லாக் அவுட்டும் செய்து விட்டுப் போய்விட்டார்கள். பதினைந்து மாத கால லாக் அவுட். அதைத் தொடர்ந்து உண்ணாவிரதம், தர்ணா, ரயில் மறியல்..... விளைவு?



* சாமிக்கண்ணு ஆதிப்பன்



* அடைக்கப்பன் ** ஜெயராமன்

கடந்த 4.1.77ல் துயர் துடைப்புச் சட்டத்தின் கீழ் 'தமிழ்நாடு டெக்ஸ்டைல் நிறுவனம்' பொறுப்பை எடுத்துக் கொண்டது. 80—ல் கற்பூர சுந்தர பாண்டியன் பொது மேலாளராக நியமிக்கப்பட்டபோது, ஏகப்பட்ட கடன்களைத் தன் மேல் வைத்துக் கொண்டிருந்த காவேரி மில்லினை லாபம் காட்டக் கூடிய அளவுக்கு நடத்திக் காட்டினார். அதோடு முன்பு தொழிலாளர்களுடைய சம்பளத்தில் குறைக்கப்பட்டிருந்த எழுபத்தைந்துரூபாயையும்திருப்பிக்கொடுத்தார். தொழிலாளர்களுடைய துரதிர்ஷ்டம் என்றுதான்சொல்லவேண்டும். அவர்போன பின்பு மறுபடி நிலைமை சீர் கெட்டது. காரணம் புதிதாக வந்தவர்கள் நிர்வாகத் திறமையற்றவர்களாக விளங்கியதுதான். 1983—ல் ஆரம்பிக்கப்பட்ட ஆட்குறைப்பைத் தொடர்ந்து, 'இனி கட்டுப்படி ஆகாதுடா' என்று தமிழ்நாடு டெக்ஸ்டைல்ஸ் நிறுவனம் மில்லை மூடுவதற்காகக் கடந்த 25.4.85—ல் கோர்ட்டில் மனு தாக்கல் செய்தது.

# பெஞ்சுகூட இல்லாமல் பெண்கள் கல்லூரி!



இதுவரைக்கும் நாம் சுற்றுப் பயணம் செய்த மாவட்டங்களிலெல்லாம் பள்ளிக்கூடக் கட்டடங்கள் தான் ஆபத்தான நிலையில் இருப்பதையும், பள்ளிக் குழந்தைகள்தான் பெஞ்சுகள் இல்லாமல் தரையில் உட்கார்ந்து பாடம் படிப்பதையும் கண்டிருக்கிறோம். ஆனால், புதுக்கோட்டை மாவட்டத்தில் கல்லூரியிலேயே அந்த நிலைதான்! புதுக்கோட்டை மாவட்டத்திலேயே ஒரேயொரு பெண்கள் கலைக் கல்லூரிதான் புதுக்கோட்டையில் இருக்கிறது. அந்த ஒரு கல்லூரியிலும் மூன்றாமாண்டு பட்டப்படிப்பு மாணவிகளைத் தவிர மற்ற வகுப்பு மாணவிகள் அனைவரும் தரையில் உட்கார்ந்துதான் படிக்கிறார்கள். கம்ப்யூட்டர் ஒன்று வாங்கப்பட்டிருந்தாலும் அதை மாணவிகளுக்குச் சொல்லிக் கொடுக்க ஆசிரியர் யாரும் நியமிக்கப் படாததால் கடந்த ஓராண்டுக்கு மேலாகத் தூசி படிந்து தான் கிடக்கிறது. கட்டடங்களும் ஆபத்தான விரிசல்களுடன்தான் இருக்கின்றன.

இதுகுறித்து ஆச்சரியப்பட்டுக் கல்லூரி ஆசிரியைகள் சிலரை விசாரித்தபோது, ''இதில் ஒன்றும் அதிசயமே இல்லை. பல அரசு மகளிர் கலைக் கல்லூரிகளின் நிலை இதுதான். தமிழகத்தின் தலைநகராம் சென்னையிலிருக்கும் ராணிமேரி கல்லூரியின் நிலையே இது போன்றதுதான்'' என்று சர்வ சாதாரணமாகச் சொன்னார்கள். புரட்சிகரமான சாதனைதான்!

— பிரின்ஸ்

''யூனியனில் நாங்கள் விடுவோமா? போராட்டம் தொடர்கிறது. கற்பூர சுந்தர பாண்டியன் காலத்தில் லாபமாக நடக்க ஆரம்பித்த மில் இப்படி மூடப்பட வேண்டிய நிலைமைக்கு எப்படி வந்ததென்று ஆராய ஒரு கமிட்டி போட்டார்கள். 'இது நஷ்ட மடையக் காரணம் தவறான நிர்வாகம்தான்' என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டது கமிட்டி. இது போல ஒரு மில்லை இப்போது ஆரம்பிக்க வேண்டுமானால் அப்போது போட்ட முதலீட்டைப் போல இப்போது ஐந்து மடங்கு முதலீடு போட்டால்தான் ஆரம்பிக்க முடியும். எங்கள் பி.எஃப், இ.எஸ்.ஐ. பணம் எதையும் சம்பந்தப்பட்ட ஆபீஸுக்குச் சரிவரக் கட்டவேயில்லை. இப்போது நாங்கள் அவஸ்தைப் படுகிறோம்.

''இப்போது தொழிலாளர்கள் குடியிருக்கும் காலனி, ஹவுஸிங் போர்டுக்குச் சொந்தமானது. கடந்த 71—ல் எங்களுக்கு ஒதுக்கப் பட்டது. அதற்காக மில் நிர்வாகம் தொழிலாளர்கள் சம்பளத்தில் பிடித்த வாடகையைத் தொடர்ந்து ஹவுஸிங் போர்டுக்குக் கட்டாததால் இப்போது வீட்டைக் காலி செய்யும்படி ஹவுஸிங் போர்டு நோட்டீஸ் விட்டிருக்கிறது. அதற்கு நாங்களா காரணம்? நியாயமாகப் பார்த்தால் அரசாங்கத்திற் கல்லவா ஹவுஸிங் போர்டு நோட்டீஸ் விட வேண்டும்'' என்றார் வைரமுத்து.

இதே புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள நமண சமுத்திரம் என்ற ஊரில் உள்ளது லட்சுமி சண்முகா ஸ்பின்னிங் மில்ஸ்.

இந்த மில்லில் வேலை செய்யும் 611 தொழிலாளர்களுடைய வாழ்க்கையும் இப்போது கேள்விக் குறியாகத்தான் நிற்கிறது. இங்கும் கடந்த 85 மார்ச்சிலிருந்தே நிலைமை சரியில்லை. மில்லை ஒரு நாள் இயக்குவது, ஒரு நாள் மூடுவது — இயங்கும் நாளில் வேலை செய்பவர்களுக்குச் சம்பளம் கொடுக்கத் தாமதம் செய்வது — பின்னர் லே-ஆஃப் — போராட்டம்! இறுதியாக மாவட்டக் கலெக்டர் தலைமையில் ஒரு கமிட்டி போடப்பட்டு, அதில், உரிமையாளர் கரூர் ஆறுமுகம் செட்டியார் மில்லை ஓட்டுவதாக உறுதி மொழியும் கொடுத்திருக்கிறார். அதன் பேரில் தொழிலாளர்கள் மறியல் செய்து எடுக்க விடாமல் செய்திருந்த சரக்கை வெளியே எடுத்துச் சென்ற முதலாளி, பிறகு உறுதி மொழியைக் காற்றில் பறக்க விட்டுவிடவே மறுபடியும் இந்த மில் ஒரு நாள் இயங்க — மறு நாள் மூட என்று கடைசியில் ஒருநாள் ஒரேயடியாக மூடப்பட்டு விட்டது. லே-ஆஃப் காலத்தில் சம்பளம் கொடுக்கப்பட வேண்டுமென்று தொழிலாளர் நல ஆணையர் சொன்னாலும் ஆறுமுகம் செட்டியார் அதைப் பற்றியெல்லாம் கவலைப்படவில்லை.

நாங்கள் தொழிலாளர்களைச் சந்தித்த போது, ''பி.எஃப், இ.எஸ்.ஐ. பணம்போன்றவற்றை நிர்வாகம் கட்டவேயில்லை. அதோடு எங்கள் கூட்டுறவு சொசைட்டிக்காக நாங்கள் கட்டிய பணத்தையும் சொசைட்டிக்குக் கட்டவில்லையென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். எங்கள் தொகுதி எம்.பி.யும் மத்திய அமைச்சருமான ப.சிதம்பரம் உட்பட பலருக்கும் தந்திகள், மனுக்கள் என்று எல்லாம் கொடுத்தாகிவிட்டது. ஒன்றும் பயனில்லை!'' என்றார்கள், தி.மு.க., காங்கிரஸ் தொழிற்சங்கத் தலைவர்களான ஜெயராமனும் அடைக்கப்பனும்.

தொழில் துறையில் பின்தங்கிய மாவட்ட

# NAVAJEEVAN HUMAN RELIEF CENTRE
## 1-57, North Mada St., P.O. Tirumala, Via. Tirupati, Pin-517 504

**"சாஸ்திரம் விதிக்கின்ற வயஸை மீறுவதற்கு சட்டம் காரணம் என்றால், சட்டம் போட்டிருக்கிற 'லிமிட்'டையும் மீறி 25 வயசு, 30 வயசுக்குக் கூடப் பெண்கள் கல்யாணம் ஆகாமல் நிற்பதற்குக் காரணம் விவாஹத்தைப் பண சம்பந்தமான விஷயமாக்கியிருப்பதுதான். இப்போது கல்யாணத்தில் நடக்கிற ஆடம்பரங்களும், வரதட்சணை வாங்குவதும், சீர் செனத்தி கேட்பதும் சாஸ்திர சம்மதமானதல்ல" — அருள்வாக்கு — ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்.**

ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் இந்த உபதேச மொழிகளைப் படித்து ஒரு சிலரேனும் மனம் திருந்தி வரதட்சணை வாங்காமல் காத்திருக்கும் கன்னிகைகளுக்கு வாழ்வு அளிக்க முன்வருவார்கள் என்கிற நம்பிக்கையுடன் ஸ்ரீ ஏழுமலையானை வேண்டுகிறோம்.

பெண்கள் தெய்வத்திற்கு சமானமாக போற்றும் நமது நாட்டில் தினம் தினம் வரதட்சணை கொடுமையினால் நூற்றுக்கணக்கான பெண்கள் கொலை செய்யப் படுகிறார்கள் அல்லது தற்கொலை செய்து கொள்கிறார்கள். மேலும் ஆயிரமாயிரம் பெண்கள் கணவன் வீட்டாரால் புறக்கணிக்கப்பட்டு வாழ வழி தெரியாமல் பரிதவித்து வருகிறார்கள். இந்த பரிதாப நிலையில் இருந்து பெண்களைக் காப்பாற்ற ஜாதி, மத, மொழி பேதமின்றி சமூக நலத்தில் ஈடுபாடு கொண்ட மாதர் சங்கங்கள், இளைஞர் அணிகள் மற்றும் கருணை உள்ளம் படைத்தவர்கள் முன்வர வேண்டும் என்று பணிவுடன் வேண்டுகிறோம்.

<u>உதவி அளிக்கப்படும்:</u> கலியுகத்தில் உதவி பெறுபவர்களுக்கும் உதவி வழங்குபவர்களுக்கும் பெரும் புண்ணியத்தை அளிக்கக் கூடிய இந்த திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் ஸ்ரீ காஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளின் அனுக்ரஹத்துடனும் அன்பார்ந்த வாசகர்களின் விசேஷ உதவியுடனும் வரதட்சணைக் கொடுமையினால் பாதிக்கப்பட்டு காத்திருக்கும் அம்பிகைகளில் ஒரு சிலருக்கேனும் மங்களகரமான புது வாழ்வு அளிக்க, "நவஜீவன் சேவா கேந்திரம்" முன்வந்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

எமது நவஜீவன் இலவசக் கூட்டுத் திருமணத் திட்டத்தின்கீழ் சம்பிரதாய முறைப்படி மிக மிக ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுக்கு தங்கத்தில் திருமாங்கல்யம் வழங்கி விசேஷ பரிசுப் பொருள்களும் அளித்து திருப்பதி—திருமலை ஸன்னிதானம் அருகே சுப விவாஹம் இலவசமாக நடத்தி வைக்கப்படும். குறிப்பாக கிராமப்புற ஏழை கோயில் குருக்கள், கிராமப்புற போஸ்ட்மேன், அன்றாடம் கூலி பெறும் ஏழை விவசாயி மற்றும் தொழிலாளிகளின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். மேலும் விபத்தினால் அங்கங்களை இழந்த ஊனமுற்ற பெண்களை விவாஹம் செய்து கொள்ள முன்வரும் நல்உள்ளம் படைத்த இளைஞர்களுக்கும் விசேஷ பரிசுகள் வழங்கப்படும். மேற்கொண்டு விவரம் அறியவும், அச்சிட்ட விண்ணப்பப் பத்திரம் பெறவும் தமிழில் எழுதலாம். கடிதம் அனுப்ப வேண்டிய முகவரி: **K. Sridhar Acharya, Founder, Navajeevan Human Relief Centre, 1-57, North Mada St., Post Tirumalai Pin. 517 504** என்கிற விலாஸத்திற்கு 28.2.87 க்குள் விவரம் கேட்டு எழுதவும்.

**யா தேவி ஸர்வ பூதேஷு தயா ரூபேண ஸம்ஸ்திதா**
**நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:**

மான புதுக்கோட்டை மாவட்டத்தில் சுமார் 1600 தொழிலாளர் குடும்பங்களை வாழ வைத்துக் கொண்டிருந்த இரண்டு மில்களுமேமூடப்பட்டுவிட்டதால்அத்தனைகுடும்பங்களும் பட்டினியால் தவிக்கின்றன.

தொழிலாளர்களை எண்ணிப் பார்க்கும் போது நமக்கும் பரிதாபமாகத்தான் இருக்கிறது. ஆனால் இவ்வாறான நிலைமைக்கு அடிப்படைக் காரணங்களை நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். ஒரு தனியார் நிறுவனம் நஷ்டப்பட்டால், அதிலே முதல் போடுகிற சில நூறு அல்லது சில ஆயிரம் பேரை மட்டும் அந்த நஷ்டம் பாதிக்கும். அரசு ஒரு நிறுவனத்தை ஏற்று நடத்தி நஷ்டப்பட்டால் அது வரி செலுத்துவோர் அனைவரையும் பாதிக்கிறது. அரசு ஏற்று நடத்தும்போது அதிகாரிகளை நியமிக்கிறது. அவர்களுக்கு ஆட்சி நிர்வாகத்தில்தான் பயிற்சி உண்டே தவிர, தொழில்—வர்த்தக நிர்வாகத்தில் பயிற்சியோ, படிப்போ கிடையாது. மேலும் அரசுத் துறை என்றால் மெத்தனப்போக்கும் ஏனோதானோ மனப்பான்மையும் புகுந்து விடும். செய் நேர்த்தியும் லாபம் அடைய வேண்டும் என்ற உத்வேகமும் இல்லாமல் போய்விடும்.

'இதே மில்கள் முன்பு தனியார் வசம் தானே இருந்தன. அப்போது ஏன் நஷ்டப் பட்டது?' என்ற கேள்வி பிறக்கிறது. ஒரு நிறுவனம் அல்லது மில் லாபகரமாக நடக்குமானால் எந்த முதலாளியும் இழுத்து மூடவோ, விட்டு ஓடவோ எண்ண மாட்டான். நஷ்டம் ஏற்பட்டதற்கான காரணங்கள் என்ன என்பதைப் பார்த்து அவற்றை நீக்க வகை காண வேண்டும்.

முதலாவது, மில்லை நவீனப்படுத்த வேண்டியிருக்கும். அப்படி நவீனப்படுத்தக் கடன் வாங்கும்போது வசூலிக்கப்படும் வட்டி கட்டுபடியாகாத நிலைக்குப் போய் விடக் கூடும்.

மேலும் மின்சார சப்ளை இந்த மில்களுக்கு அரசு சரியாகத் தரவில்லை. 24 மணி நேரம் இயங்கும் மில்லுக்கு 14 மணி நேரம் கூட ஒழுங்காக வழங்கவில்லை.

ஆக இப்படியெல்லாம் காரணங்களை ஆராய்ந்து அவற்றை நீக்க அரசு முன்வராத வரையில் யார் ஏற்று நடத்தினாலும் நஷ்டமும் தொழிலாளருக்குக் கஷ்டமும்தான் மிஞ்சும்.

இன்று இந்தத் தொழிலாளர்களின் துயர் துடைக்க அரசு விரும்பினால், 1. மில்களை அரசுடைமையாக்கி நஷ்ட ஈட்டினைக் காலக் கிரமத்தில் தருவதாகக் கூற வேண்டும். 2. நிர்வாகத்துக்கு அரசு அதிகாரியைப் போடாமல், அமைச்சரின் உறவினரைத் தேடாமல் நிர்வாகத் துறை பயின்ற, மில் நிர்வாகத்தில் அனுபவமுள்ள திறமைசாலி ஒருவரைப் போடுவதுடன் அவருக்கு இலக்கு நிர்ணயித்து, அதை எட்டினால் சன்மானம் வழங்க வேண்டும். 3. வட்டியில்லாக்கடன் கொடுத்து மில்களை நவீனப்படுத்த உதவ வேண்டும். 4. இத்தனைக்கும் மேல் மின் சப்ளை 24 மணி நேரமும் உறுதி செய்ய வேண்டும்.

இதையெல்லாம் தமிழகத்தில் இன்றைய அரசு செய்துவிட்டால்....

ஹூம், இப்படி கவனித்துக் கவனித்து ஒவ்வொரு காரியத்தையும் அரசு செய்திருக்குமானால், தமிழகம் ஏன் தொழில் துறையில் 2—வது இடத்திலிருந்து 12—வது இடத்துக்குச் சறுக்கி விழுந்திருக்கப் போகிறது?

— கௌசல்யா

அட்டை வண்ணப்படமும் புதுக்கோட்டை மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும் எடுத்தவர்:

**கே.வி. ஆனந்த்**

# அடுத்த இதழில்...

- கலவடிகன் சொல்லும் கதை
  — Cover Story





- ''ஒரு தலைமுறையே தவறு செய்து விட்டது!''
  — சமயச் சொற்பொழிவாளர் பிரேமா பாண்டுரங்கன் பேசுகிறார்.

- தில்லி திரைப்பட விழாவில் ஜெயமன்மதன்!

# பூவிழி வாசலிலே...





யாரோ யாரையோ கொல்லும்போது தற்செயலாய் அதை ஓர் அம்மாவும் பிள்ளையும் பார்த்துவிட, கொலைகாரர்கள் அம்மாவைத் துரத்திப் பிடித்து சதக். குழந்தை தப்பித்துவிடுகிறது. கொலைகாரர்கள் அந்தக் குழந்தையை வேட்டையாட முயல, அந்தக் குழந்தைக்கு ஒரு புத்திசாலி இளைஞன் பாதுகாப்பாய் இருக்க, சிக்கல்; மேலும் சிக்கல் என்று கதை வளருகிறது.

கதாநாயகன் சத்யராஜ். கொடுத்த பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார்.

படத்திற்குக் கதாநாயகி என்று யாரையும் குறிப்பிட முடியாவிட்டாலும், புதுமுகம் கார்த்திகாவிற்கு நல்ல ரோல். ஒருபுறம் மாதவி, ஒருபுறம் இளவரசி, ஒருபுறம் வேறு யாரையோ என்று பல முகங்களை (மார்க்கெட் இழந்த) கார்த்திகா நினைவு படுத்துகிறார். இது இவருக்கு மைனஸ் பாயின்ட் என்று எடுத்துக் கொண்டால் அவருடைய நடிப்பு ப்ளஸ் பாயின்ட். போனில் துடுக்குத்தனம் செய்வதும், துள்ளித் துள்ளித் திரிவதும், ஸீரியஸான நேரங்களில் சட்டென்று பாவங்களை மாற்றிக் கொள்வதும் வெகு இயல்பு.

அப்புறம் அந்தச் சின்னக் குழந்தை. அந்த அகலக் கண்களும், வாயில் கட்டை விரலை வைத்துச் சூப்பும் அழகும், அடடா... பேசுவது ஒரே ஒரு வார்த்தை. லாலா. அந்த லாலாவுக்கே குழந்தையின் பாவ வெளிப்பாடு அபாரம். புதுமுகங்களை மிகக் கச்சிதமாகத் தேர்ந்தெடுக்கும் கலையை டைரக்டர் பாசில் எங்கேயிருந்துதான் கற்றுக் கொண்டிருக்கிறாரோ!

பையன் காது கேளாதவனாக இருப்பானோ என்று சத்யராஜுக்குச் சந்தேகம். அது மீன் தொட்டி கீழேவிழுந்து உடைவதில் வருகிறது. சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள, போட்டு உடை இந்தப் பெரிய சட்டியை; அந்தப் பெரிய அலங்காரப் பொருளை என்று மாற்றி மாற்றி உடைக்கிறார்.

என்றைக்கோ, பார்த்த கொலைகாரனின் முகம் நினைவுக்கு வராமல், ஆர்ட்டிஸ்ட் சத்யராஜ் தவிக்கும்போது, அந்தக் காவி உடைச் சாமியார்களின் டான்ஸ். நடுநடுவே கொலைகாரனின் முகம்.

அப்புறம் கடைசியாகக் கொலைகாரன் குத்துண்டு சாகும்போது குழந்தையின் அம்மா பட்ட அவதியை அப்படியே அந்த அம்மாவின் குரலில் கொண்டு வந்து காட்டி மனத்தில் பதிய வைப்பது.

விஷுவலாக ஒரு விஷயத்தைச் சொல்வது எப்படி என்கிற விஷயத்தில் பாசில் எக்ஸ்பர்ட் என்று ஏற்கெனவே நிரூபித்தவர். இதிலும் அப்படியே.

சத்யராஜ் போலீஸிடம் குழந்தையை ஒப்படைக்காததற்குப் படத்தில் அவர் சொல்லும் காரணம் — சப்பைக்கட்டு.

அதேபோல் சத்யராஜ் ஹீரோவாக இருக்கிறாரே என்பதாலோ என்னவோ கடைசியில் அந்த ஆக்ஷன் க்ளைமாக்ஸ். வேறு மாதிரி கொடுத்திருக்கலாம்.

இளையராஜாவின் பாடல்களும், ரகுவரனின் நடிப்பும், காமிராவின் கண்ணும் ஓகே. ஓகே.

தொடக்கத்திலிருந்து இறுதிவரை சீராகப் போனாலும் பார்த்தேயாக வேண்டும் என்று சொல்ல முடியாமல் பத்து நல்ல படங்களோடு, பதினோராவது நல்ல படம் என்று தான் சொல்ல முடிகிறது.

— ஜெயமன்மதன்




கூர்க்காலாந்து பிரச்னை யில் ராஜீவ் காந்திக்கும் ஜோதி பாசுவுக்கும் கருத்தொற்றுமை ஏற்பட்டுள்ளது.




கூலிப் படையாவது, ஒண்ணாவது!.. அதெல்லாம் கிடையாது! இந்தியா தன் குற்றச் சாட்டை வாபஸ் பெற வேண்டும்!




சத்யா மூவீஸின்
மகத்தான புதிய படைப்பு

# என்னைப் பின் தொடர்கிறார்கள்

வீரப்பன்
எம்.ஜி.ஆர்
ஜெயலலிதா









# கல்கி

1987 ஜனவரி 25
மலர் 45 இதழ் 26
அக்ஷய தை 12



## ஆற்றலை உணராத அனுமன்!

ராஜீவ் பிரதமராகப் பொறுப்பேற்று, இரண்டு ஆண்டுகள் பூர்த்தி அடைந்துவிட்டன. ஆனால், பிரச்னைகள் எதுவும் தீர்ந்துவிடவில்லை என்பதோடு புதிய பிரச்னைகளும் எழுந்துள்ளன!

பஞ்சாப் பிரச்னை அப்படியே இருக்கிறது என்பது மட்டுமல்ல, ஒருவிதத்தில் மோசமடைந்து கவலை அளிக்கிறது. அங்கே பயங்கரவாதிகள் — நேற்று வரை ஹிந்துக்களைக் கொன்றார்கள்; இன்று சீக்கியரையே கொல்கிறார்கள்! அதாவது, பிரிவினைவாதிகளான பயங்கரவாதிகள் பற்றி போலீஸுக்குத் தகவல் தரும் சீக்கியர்கள் கொல்லப்படுகிறார்கள். இன்னும் அஸ்ஸாம் பிரச்னை, இலங்கைப் பிரச்னை எல்லாம் அப்படி அப்படியேதான் இருக்கின்றன. போதாக்குறைக்குப் புதிதாகக் கூர்க்காலாந்து பிரச்னை கிளர்ந்தெழுந்திருக்கிறது; திரிபுராவிலும் வன்முறை தலை தூக்கியிருக்கிறது; மொழிப் பிரச்னை விசுவரூபம் எடுக்க ஆரம்பித்திருக்கிறது. பொருளாதார ரீதியாகப் பார்த்தாலோ, தொழில் வர்த்தகத் துறைகளில் பல முன்னேற்றங்கள். இருந்த போதிலும், விலைவாசி உயர்வு மக்களை வாட்டுகிறது.

இதையெல்லாம் நோக்கும்போது ராஜீவுக்குப் பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டும்; அமைதியான தீர்வு காண வேண்டும் என்ற ஆர்வமும் மன உறுதியும் இருந்தாலும், அதற்கான ஆற்றல் இருக்கிறதா என்பது சந்தேகத்துக்கிடமாகிவிட்டது!

இன்று நாடு தழுவிய அளவில் அவரை விட்டால் மக்களைக் கவரத்தக்க தலைவர் யாரும் இல்லை. இந்த உண்மையே, அதனால் ஏற்படும் துணிவே, ஓர் அலட்சியப் போக்குக்கு அடிகோலி விடக் கூடாது. மாறாகத் தமது இந்தப் பிராபல்யத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி, மக்களை ஊக்குவித்து ஒரு மகோன்னதமான பாரதத்தை அவர் உருவாக்க முடியும். ஆனால் ராஜீவ் இந்த மகத்தான வாய்ப்பைப் படிப்படியாக இழந்து வருவதாகவே தோன்றுகிறது.

டி.வி.யில் தம்மையே அதிகமாகக் காட்டக் கூடாது என்றும் மற்ற தலைவர்களுக்கும் சம வாய்ப்பு அளிக்க வேண்டும் என்றும் ராஜீவ் கூறியது சரிதான். ஆனால் டி.வி., ரேடியோ என்ற பொது ஜனத் தொடர்புச் சாதனங்களின் சக்தியை அவர் முழுதுமாக உணர்ந்ததாகத் தெரியவில்லை. அவற்றைக் கட்சிக்காக அன்றி நாட்டின் மேம்பாட்டுக்காகப் பயன்படுத்தும் விதத்தை அவர் புரிந்து கொள்ளவில்லை. கென்னடி, வாரம் ஒரு முறை டி.வி.யில் தோன்றுவார். நாட்டின் பிரச்னைகளை மக்களுக்குப் புரிகிற மாதிரி எளிமையாக எடுத்துரைப்பார். நிபுணர்களைக் கலந்தாலோசித்துத் தாம் எடுத்துள்ள முடிவுகளைப் பற்றிக் கூறுவார். மக்களின் ஒத்துழைப்பை வேண்டுவார். ஏதோ அவர் தங்கள் வீட்டுக்கு நேரில் வந்து, தங்கள் உதவியைக் கோரியதுபோல் மக்கள் உணர்ந்தார்கள். மெய்சிலிர்த்தார்கள். கென்னடி இதில் அடைந்த மகத்தான வெற்றி, அமெரிக்காவின் வெற்றியாக அமைந்தது.

இப்படி ராஜீவும் செய்ய முடியும். அதன் மூலம் தேச பக்தியையும் தேசிய ஒருமைப்பாட்டினையும் பலப்படுத்துவதுடன் மக்களிடம் — குறிப்பாக இளைஞர்களிடம் நல்லொழுக்கம், கடின உழைப்பு போன்ற நற்குணங்களை வளர்க்க முடியும். ஓராண்டுக்கு ஒரு லட்சியம் என்று, மக்கள் முன் ஒரு மகத்தான இலக்கினை வைத்து, அதனை அடைய, அவர்களுடைய ஒத்துழைப்பைக் கோரிப் பெற முடியும். சுதந்திரப் போராட்ட காலம் போல இன்றும் ஒரு லட்சிய வேகத்தை மக்களிடம் உருவாக்க வேண்டும்.

இதையெல்லாம் செய்ய ராஜீவை விட்டால் நமக்கு வேறு யார் இருக்கிறார்கள்? சுற்றுமுற்றும் பார்த்தால் ஏமாற்றமே ஏற்படுகிறது. சமீபத்தில் ஒன்று கூடிப் பேசிய எதிர்க் கட்சித் தலைவர்கள், 'பார்லிமெண்டரி ஜனநாயகம் வேண்டாம்; ஜனாதிபதி ஆட்சி முறை வேண்டும்' என்று கூறியிருக்கிறார்கள். நேற்றுவரை இந்த யோசனையை எதிர்த்தவர்கள்கூட இன்று ஆதரவு தெரிவித்துள்ளார்கள் என்றால் காரணம், எதிர்க் கட்சிகள் ஒன்றாக இணைய முடியாது, எனவே இ. காங்கிரஸை வெற்றி கொள்ளவும் முடியாது என்பதை அவர்கள் உணர்ந்திருப்பதுதான். ஆனால் அதே கூட்டத்தில் ஃபாரூக் அப்துல்லா சரியாகச் சொன்னார்: ''மாற்றம் தேவைப்படுவது ஆட்சி முறையில் அல்ல; நமது மனப்பான்மையில்தான்'' என்று. நாடு தழுவிய அளவில் அந்த மாற்றத்தை ஏற்படுத்தும் வல்லமை படைத்த ஒரே மனிதர் ராஜீவ். ஆனால் அவர் தமது சக்தியை உணரவில்லையே!

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# பஞ்சாப், எம்.ஜி.ஆர். -இந்தியாவின் எமனா?



* சலாமே ஏற்றவர்!



* தைரியம் வந்தது!



* 'பதவி மாற்றம்!



* ஜோக்!

* கா. அப்துல் மஜீத், திருமயம்

? பூரண மதுவிலக்கைப் பற்றிக் கூறிய கல்கி, மதுவிலக்கை மீண்டும் கொண்டு வந்த எம்.ஜி. ஆரைப் பாராட்டாமல் எதிர்க் கட்சி பாணியில் பூதக் கண்ணாடி வைத்துக் குறை களை மட்டுமே கண்டுபிடித்துக் கூறியுள்ளது. அந்தர் பல்டி அடித்தது போல் இல்லையா?

! இப்போது கள், சாராயக் கடைகளை மட்டுமே மூடியிருப்பதற்குப் பெயரா மது விலக்கு? அந்தர் பல்டி அடித்துக் கொண்டே இருப்பது ஆட்சிக்கு வருபவர்கள்தாம். நாம் எப்போதும் பூரண மதுவிலக்கு விஷயத்தில் உறுதியாகவே இருக்கிறோம்.

* அர. மணிவண்ணன், சென்னை — 16

? 'பாகிஸ்தான் உருது மொழியை வங்காளி கள் மீது திணித்ததால்தான், பாகிஸ்தான் இரண்டாக உடைந்தது' என்று ஜனாதிபதி ஜெயில்சிங் கூறியது. இந்தி வெறியர் களுக்கு ஒரு பாடத்தைப் புகட்டத்தானே?

! நமது இந்திய ஜனாதிபதிகளுக்கு உரிய சாபக்கேடு; பதவிக் காலம் முடியும் தறு வாயில்தான் தைரியம் வந்து உண்மை பேசு வார்கள். எப்படியோ ஜனாதிபதி சொன்னது மொழி வெறியர்களின் சிந்தனைக்குரியது என்பதில் சந்தேகம் இல்லை.

* டி. ஸ்ரீராமன், நடுப்பேட்டை

? நீங்கள் சமீபத்தில் ரசித்த அரசியல் ஜோக் ஒன்று சொல்லுங்களேன்!

! அடுத்து வரும் கேள்வியில் பொதிந்திருக் கும் ஜோக்தான்!

* க. தியாகராசன், நெய்வேலி

? அ-இ-அ-தி-மு-க. தொண்டர்களின் அச் சுறுத்தலுக்குப் பணிந்துதான், கடவுள், எம்.ஜி. ஆருக்கு நோயிலிருந்து மறுவாழ்வு தந்ததாக அமைச்சர் கே.கே.எஸ்.எஸ்.ஆர். இராமச்சந்திரன் பேசியிருக்கிறாரே?

! கடவுளையே அச்சுறுத்திப் பணிய வைப் பவர்களா அவர்கள்! அது உண்மையானல் வன்முறையின் ஆணிவேர் அங்கேதான் இருக்கிறது!

* எஸ். பிரியதர்சினி, மதுரை — 1

? வள்ளுவருக்கு நான்கு கோடி ரூபாய்ச் செலவில் சிலை அமைப்பதைவிட, வீட்டுக்கு ஒரு திருக்குறள் புத்தகத்தை அரசு இலவச மாக அளித்தால் மிகப் பயனுள்ளதாய் இருக் குமே?

! நல்ல ஐடியாதான். ஆனாலும் அதில் ஓர் ஆபத்தும் இருக்கிறது. ஒவ்வொரு புத்தகத் தின் மேலும் 'முதலமைச்சரின் இலவசத் திருக்குறள் வழங்கும் திட்டம்' என்று அச்சடித்து விடுவார்களே!

* பாலா அசோக், திருச்சி — 1

? பத்தாவது புத்தகக் கண்காட்சி பற்றிச்

சொல்லுங்களேன்?

! புத்தக விற்பனை எப்படியோ, சென்னையில் கூட்டம் நிறையவே இருந்தது. காகித விலை உயர்வினால் சாமானியர்கள் வாங்கக் கூடிய விலையில் புத்தகங்கள் வெளிவருவதென்பது நடக்காத விஷயமாகிவிட்டதே. இதை அரசு உதாசீனப்படுத்துவதென்பது எந்தவிதத்திலும் நல்லதல்ல.

* கே.கே. பழனிசாமி, ஈரோடு—2

? 'கல்கி தி.மு.க.வுக்குப் போடும் ஜால்ரா' சம்பந்தமான கேள்விக்குத் தராசுவின் பதில் (பாட்டு) மிகுந்த வேதனையளிப்பதாக உள்ளது. தி.மு.க.வின் இந்தி எதிர்ப்பையோ, அதற்குக் கல்கியின் ஆதரவான கருத்துக்களையோ நாம் எதிர்க்கவில்லை. தி.மு.க.வின் 'வழி சரியாக இல்லை' என்றுதான் சொல்கிறோம். இதை ஏன் தராசு புரிய மறுக்கிறார்?

! தி.மு.க.வின் வழி சரியில்லை என்று நீங்கள் சொல்லுவதுபோல், சரி என்று நான் கருதலாமே! குற்றமல்ல என்று ராஜாஜியும் கருதியிருக்கிறார். கருணாநிதி அரசியல் சாசனத்தை அவமதித்தாரா என்பதை நிர்ணயிக்கும் பொறுப்பு இப்போது நீதிமன்றத்தினிடம் விடப்பட்டுள்ளது.

* ஜி. மெய்யப்பன், லெட்சுமாங்குடி

? பிரச்னைகளைச் சமாளிப்பதில், பர்னாலா, எம்.ஜி. ஆர் — இருவருக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! பர்னாலா முதல்வராவதற்கு முன்பே பிரச்னைகள் ஆழ வேரோடிச் சவாலுக்கு அழைத்தன. அந்தச் சவாலை ஏற்றுக்கொண்டு முதல்வரானவர் அவர். அந்த அளவுக்குத் துணிச்சல் மிக்க — அமைதி காண வேண்டுமென்ற நல்ல நோக்கத்தையும் முயற்சியையும் கொண்ட அவரை யாருடன் ஒப்பிட்டாலும் அது நாணயமான ஒப்பீடாக இருக்க முடியாது. ஸாரி.

* ஜி. செல்வம், நந்தியநல்லூர்

? தாங்கள் மெரீனாவில் அமர்ந்து அந்தக் காற்றை வாங்கிக் கொண்டே சுண்டல் சாப்பிட்டதுண்டா?

! உண்டு. அதோடு, ராஜரத்தினம் என்று ஒருவர்; பல்பொடி விற்பவர். அந்தப் பல்பொடிக்கு 'ராஜரத்தினம் பல்பொடி' என்றே பெயர். கூடவே தலைவலித்தைலமும், வயிற்று வலி மாத்திரைகளும் விற்பார். அவர் வியாபாரமே ஒரு தனி டெக்னிக். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை மாலையும் சீரணி அரங்கத்தின் அருகிலுள்ள அந்தக் குறிப்பிட்ட இடத்தில் வந்து நின்று கொண்டு, முதலில் ஓர் அரசியல் பொதுக் கூட்டத்தில் பேசுவது போல் பேச ஆரம்பிப்பார். அந்தப் பேச்சில் இந்தக் கால அரசியல் குறித்துக் குத்தலான விமர்சனங்கள்தான் ஏராளமாய் இருக்கும். அதுவும் அன்று மாலைச் செய்தித் தாள்களில் வந்த விஷயங்கள் — பேட்டிகளிலிருந்து பேசுவார். அக்கால அரசியல் நேர்மையும், சுதந்திரப் போராட்ட காலத் தியாகிகளைப் பற்றிய விஷயங்களும் இருக்கும். கூடவே வரும் நகைச்சுவைகள் கேட்பவர்களை வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கும். ஏராளமான பேர் அவர் பேச்சை ரசித்துக் கேட்பார்கள். பேச்செல்லாம் முடிந்த பிறகு, கடைசியில் தமது பல்பொடி மற்றும் தலைவலித் தைலம், வயிற்று வலி மாத்திரைகளின் குணங்களைச் சுமார் ஐந்து நிமிடம் (அதிலும் அரசியல் வாடை வீசும்!) கூறி வாங்கச் சொல்லுவார். அத்தனையும் ஐந்தே நிமிடங்களில் விற்றுப் போகும். இதையெல்லாம் சில்லென்ற அந்தக் காற்றோடு சேர்த்து முன்பெல்லாம் அனுபவித்தது உண்டு. ஏனோ தெரியவில்லை, கடந்த ஓராண்டு காலமாகவே ராஜரத்தினம் அங்கே வருவதில்லை. அந்த இடத்தைப் பார்க்கும்போதெல்லாம் வருத்தமாக இருக்கிறது.

* அ.மு. தாஜ் மஜீத், திருமயம்

? நடைபெற்ற வார்டு இடைத் தேர்தலில் அ.இ.அ.தி.மு.க. அமோக வெற்றி பெற்று விட்டதே! இதிலிருந்தே மக்கள் வன்முறைக் கட்சிகளை வெறுத்து ஒதுக்கிவிடுவார்கள் என்பது தெரிகிறதல்லவா?

! மயிலாடுதுறையில் புதிதாகச் சேர்க்கப் பட்ட 'புது' வாக்காளர்களையும்மீறித்தி.மு.க. ஜெயித்துவிட்டதே. இதிலிருந்தே மக்கள் அடக்குமுறைக் கட்சிகளை வெறுத்து ஒதுக்கி விடுவார்கள் என்பது தெரிகிறதல்லவா? ஜனநாயகத்தில் வன்முறை தலையெடுப்பது பெரும்பாலும் அடக்குமுறையின் எதிரொலியாகத்தான் இருக்கும்.

* எம். விசாலாட்சி, கடையம்

? மோகன்தாஸ் பற்றித் தங்கள் நிருபர்கள் துப்பறிந்து கூறிய செய்திகள் சரியானவையா அல்லது ஹிந்து பத்திரிகை வெளியிட்ட செய்திகள் சரியானவையா என்பதை இப்போதாவது தெரிந்து கொண்டீர்களா?

! மோகன்தாஸ் லீவிலிருந்து திரும்ப அழைக்கப்பட்டுப் பதவி மாற்றம் செய்யப் பட்டுள்ளதைத்தானே குறிப்பிடுகிறீர்கள்? அதுதான் அரசியல் சதுரங்க நாடகம் என்பது. அங்கே பிரதமர், ஜி.பி. ராஜினாமாவை வருத்தத்துடன் ஏற்பதாகக் கூறுகிறார். இங்கே முதல்வர், மோகன்தாஸிடம் அதிருப்தியை வெளிப்படுத்துவதுபோல் காட்டிக் கொண்டு பதவி மாற்றம் செய்கிறார். கல்கி கட்டுரையை மீண்டும் ஒருமுறை படியுங்கள். அத்துடன் ஈழப் போராளிகளுக்கு இந்திரா காந்தி இடமளித்து வந்தார் என்பதையும் ஜி.பி. அந்த மரபில் வந்தவர் என்பதையும், ராஜீவ் ஈழப் பிரச்னையில் சிதம்பரம், நட்வார் சிங் போன்றவர்களையே ஈடுபடுத்தினார் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். ஒன்றுக்கொன்று முடிச்சுப் போடுங்கள். எல்லாமே புரியும்.






வட்டமேஜை

# ஏரிக் கரையில் ஏக்கமுடன் காத்திருக்கும்...

* புனித காவிரி, கங்கை நதிகளில் நீராடிய பரவசத்தைப் 'பொன்னியின் செல்வன்' ஆரம்பம் ஏற்படுத்தி விட்டது.

ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

* இவ்வாரக் கல்கியில் 'பொன்னியின் செல்வனை'ப் படித்தேன். மகிழ்ந்தேன். ஏதோ ஒரு நல்ல பழைய நண்பனைப் பார்த்த மனநிறைவு! அமரர் கல்கியின் கைவண்ணத்தால், கதாபாத்திரங்கள் படிப்பவர்களை எப்படி ஆட்கொள்கிறார்கள் என்பதை மீண்டும் உணர்ந்து வர மறுபடியும் ஒரு வாய்ப்பு.

பூண்டி டி. கிருஷ்ணசிங் பர்லர்.

* 'பொன்னியின் செல்வன்' நாவலுக்குக் காலம் சென்ற மணியம் அவர்களின் சித்திரங்களையே வெளியிடுவது பாராட்டத் தக்கது.

தக்கலை, ஓ. சங்கரகப்பு.

* சார்! இன்று காலை கல்கி வந்ததிலிருந்து எங்கள் வீடே அமர்க்களப்படுகிறது. சிறியவர் முதல் பெரியவர்வரை அமரர் கல்கியின் பொ. செல்வனை 'நான் தான் முதலில் படிப்பேன்'; 'இல்லை நான்தான் முதலில் படிப்பேன்' என்று ஒரே ரகளைதான் போங்கள்!

குத்தாலம், எஸ். ராஜா.

* 'பொன்னியின் செல்வன்' ஆரம்பமே படு ஜோர். அட்டைப்படம் அபாரம்! அசத்திவிட்டார் மணியம். இப்போது நான் வீரநாராயண ஏரிக்கரையில் ஏக்கமுடன் வீற்றிருக்கிறேன். அடுத்த இதழுக்காக.

கோட்டாத்தூர், என். சந்திரசேகரன்.

* மோகன்தாஸ் போன்ற, நாட்டின் பாதுகாப்பின் பொறுப்பில் உள்ள — தன்னுடைய மறுப்பையோ, எண்ணங்களையோ அத்தனை சுலபமாக வெளியிட முடியாத பதவியில் உள்ளவரின் மேல் சேற்றை அள்ளி வீசுவது நாகரிகமல்ல. உண்மையைப் பொறுப்புணர்வோடு சுட்டிக்காட்டிய துணிச்சல் உங்களுக்கு மட்டுமே உண்டானது.

விழுப்புரம், கே.எஸ். குமார்.

* அதிகாரி, அதிகாரி போன்று (மட்டும்) செயல்பட்டால் எந்தப் பத்திரிகை சார் வம்புக்கு இழுக்கும்? ஓர் அதிகாரி அரசியல்வாதி போன்று செயல்பட்டதால்தானே அவரைப் பற்றி எல்லாப் பத்திரிகைகளும் அலசுகின்றன.

கொப்பம்பட்டி, த. ஜெயக்குமார்.

* பேபி சுஜிதா நடித்த படம், 'புன்னகை மந்திரம்' அல்ல ஸ்வாமி. மந்திரப் புன்னகை!

ஈரோடு—2, அருண்.

* இந்த முறை என்ன சிறுகதை ஸ்பெஷலா? மா, பலா, வாழை என்று மூன்று சிறுகதைகளும் முக்கனிகளாகச் சுவைத்தன.

கொரட்டூர், கே.என். ஸ்ரீனிவாஸ்.

* வயிற்றில் குண்டுடன் வாழும் ஆதிகுருநாதனின் கதை மிகவும் பரிதாபத்திற்குரிய கதை. பாங்க் நிர்வாகம் அவருக்கு நஷ்ட ஈடு வழங்குவதுதான் மனிதாபிமான செயல்.

பெங்களூர்—16, ஏவியார்.

* ஆபாச மலையாளப் படங்களைப் பற்றித் தராசு அளித்த பதில், அருமையான பதில். நம்மவர்கள் மட்டுமே விழுந்தடித்துக் கொண்டு பார்ப்பதால் தானே, அவர்களும் விழுந்தடித்துக் கொண்டு அந்த மாதிரிப் படங்களை எடுக்கின்றார்கள்; இங்கே கொண்டு வந்து வெளியிடுகிறார்கள்.

சென்னை—16, அர. மணிவண்ணன்.

* தமிழக முதல்வருக்கு, தலையங்கத்தில், 'அகில உலகப் புரட்சிச் சக்கரவர்த்தி' என விளையாட்டாகப் பட்டம் அளித்துள்ளீர்கள். ஆனால் அந்தப் பட்டத்தையே, இனி அந்தக் கட்சி, தன் தலைவருக்கு பயன்படுத்திக் கொண்டால் ஆச்சர்யப்படுவதற்கில்லை!

திருச்சி, ராஜேஸ்வரி.

* கள் சாராயக் கடை ஒழிப்பில், தமிழக அரசின் குழப்பமான நிலையையும் அரசின் புதுமையான (?) மதுவிலக்குக் கொள்கையையும் தலையங்கத்தில் நாசூக்காக, அல்ல, நன்றாகவே குட்டியுள்ளீர்கள். முதல்வருக்குத் தாங்கள் வழங்கிய பட்டமும் மிகப் பொருத்தமானதே!

சென்னை—15, சைதை வி. முரளி.

* 'அர்த்தமற்ற அலவங்களை அடித்து விரட்டுங்கள்' என்ற, "லப்பில் வெளிவந்த அந்தப் பயனுள்ள பன்னிரெண்டு பக்கங்களையும் பத்திரமாக எடுத்துப் பாதுகாத்துக் கொண்டேன். எந்தக் காலத்திலும் பயன்படக் கூடிய அருமையான தகவல்கள் நிறைந்த பக்கங்களாயிற்றே அவை!

தோப்புத்துறை, ஹெச். கே. நாசர்.

* பழக்கங்களின் அடிமையால் மனிதன் எப்படியெல்லாம் பாதிக்கப்படுகிறான் என்பதை பயம், டென்ஷன், கோபம், மறதி என்று விவரித்து அந்தப் பிரச்னைகளுக்குப் பலன் தரும் வகையில் தோழமையாகக் கட்டுரைகளை வெளியிட்டிருப்பது மன நிறைவைத் தந்தது.

வல்லம், ஆர். மைதீன் பாட்சா.

# நேரில் வருவான்

தீபாவளிக்கு மூன்று நாள் இருக்க, அந்தி சாயும் நேரம்.

''சாந்தி.... சாந்தி....''

அவசரமாக யாரோ கதவைத் தட்டினார்கள்.

தையல் மெஷினில் ரவிக்கை தைத்துக் கொண்டிருந்த சாந்தி, பாதி ஆர்வமும் பாதிச் சலிப்புமாக வந்து கதவைத் திறந்தாள்.

பெட்டிக் கடை மருதமுத்து தவிர, அவனது தோளுக்குப் பின்னால் ஓர் இளைஞன்.

''இப்படி வா, தம்பி'' என்று அவனை முன்னால் வரச் செய்து, சாந்தியிடம் சொன்னான் மருதமுத்து. ''உன்னால் எனக்கு ஒரு முக்கிய வேலை ஆகணும் அம்மா.''

''என்ன?''

''இந்தப் பையன் டவுனிலிருந்துவருதாம்.ஏதோதொழிற்சாலையிலே அப்பன்ரிக்சா...''

தப்பாகச் சொல்கிறோம்என்பது புரிந்து மருதமுத்துவே பேச்சை நிறுத்தி, நமட்டுச் சிரிப்புடன் இளைஞனைப் பார்த்தான்.

கிராமத்தின் புரியாத்தனம், அந்தக் கிருதா இளைஞனையும் புன்னகை புரிய வைத்தது.

''அதாவது... அப்பரண்டிசாகச் சேரணுங்க...'' என்றவனாய், சாந்தியின் முகத்தை நேருக்கு நேராய்ச் சந்தித்தான்.

வட்ட முகம்.

குடை பிடித்ததுபோல் பிசிறில்லாத, நெற்றித் திட்டு. அதில் வெட்டவெளி நிலவாய் பிரகாசிக்கும் குங்குமப் பொட்டு.

''அப்படிங்களா!'' என்று அவளும் அவனை கணப்பொழுது பார்வையால் நிறுத்தினாள்.

கொத்தாய்க் குலுங்கும் முடி. கத்தரித்த மீசை. களத்து மேட்டுக்கு வந்த புது நெல் மாதிரி நிறம். இன்னும் பார்க்கலாம்



தமிழினியன்

தான். ஆனால், பெண்மை அவளது விழிகளுக்குக் கடிவாளம் போட்டுவிட்டது.

இளைஞனே தொடர்ந்தான்.

"தீபாவளிக்கு மறுநாள் பயிற்சியில் சேரணும் என்று நேற்று திடீரென்று ஆர்டர் போட்டுவிட்டார்கள். பயிற்சியில் சேர்வதற்கு ரெடியாய்த்தான் இருக்கிறேன். ஆனால், காக்கி யூனிபாரத்தோடு வரணுமாம். அதுதான் இப்போது பெரிய பிரச்னையாகிவிட்டது. துணியை வாங்கிக் கொண்டு டவுனில் ஒரு தையல் கடை விடாமல் கேட்டுவிட்டேன். தீபாவளி வேலை நிறைய இருக்கிறதென்று யாருமே தைத்துத் தரமாட்டேன் என்று சொல்லிவிட்டார்கள். அப்புறம்தான் இந்த யோசனை வந்தது. கிராமத்திலேயாவது முயற்சி பண்ணலாம் என்று இங்கு வந்தேன்...."

"வந்தும்பிரயோசனமில்லே,சாந்தி" என்று மருதமுத்து உதட்டை மடித்தான். "இங்கு உள்ளதோ இரண்டே இரண்டு தையல் கடை. அவர்களும் முடியாதென்று சொல்லிவிட்டார்கள். மனம் நொந்து போய் நம்ம கடைவாசலிலே ஒதுங்கி நின்றிருந்தப்பத்தான் நான் விசாரித்தேன். உன் ஞாபகம் வந்தது. உடனே கூட்டி வந்துட்டேன்."

"என்னிடமா?"

"ஏன்?"

"சட்டையானாலும் தைச்சுடுவேன். பேண்ட் தைத்துப் பழக்கம் இல்லையே."

"இப்ப பழக்கப்படுத்திக்க வேண்டியது தான்" இலகுவாய்ப் பேசினான் மருதமுத்து.

"துணி வீணாயிடுச்சுதுன்னா...."

"அதைப் பற்றிக் கவலைப்படாதீங்க. யூனிபாரம்தான். கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாலும் அட்ஜஸ்ட் பண்ணிக்குவேன்."

"இரு...ந்...தா...லும்..."

வாய், தயக்கமாக முணுமுணுத்ததே தவிர, மனம் ஆர்வத்துடன் செயல்படுவதாகத் தோன்றியது, சாந்திக்கு.

துணியை வாங்கி மெஷின் மேஜையில் வைத்தாள். இழுப்பறையைத் திறந்து அளவு நாடாவை எடுத்தாள்.

"இப்படி வந்து நில்லுங்க."

அவள் தைக்கப் போகிறாள் என்பது நிச்சயமானதும், "ரொம்ப நன்றிங்க" என்று மகிழ்ச்சியுடன் வந்தான், அந்த இளைஞன்.

பாண்டுக்கு உயரத்தைத்தான் முதலில் அளவுஎடுப்பார்கள். அப்பழக்கத்தில்சட்டையைத் தூக்கினான், அவன்.

"ம்ஹூம்... அதெல்லாம் வேண்டாங்க" என்று வெட்கம் சிந்தும் புன்னகையுடன் சட்டையைத் தொங்கவிட்டபடியே உயரத்தை அளந்து கொண்டாள் சாந்தி. இடுப்புச் சுற்றளவை அவனைவிட்டே அளந்து பார்த்து சொல்லச் சொன்னாள்.

"இதெல்லாம் தைக்கிறவர்கள் அளவெடுத்தால்தான் சரியாய் வரும்" என்றான், அவன்.

"சரியா, இல்லையா என்று தைத்த பிறகு சொல்லுங்களேன்" என்று அளவு நாடாவை மடிக்கத் துவங்கினாள் சாந்தி.

"தொடை அளவு எடுக்கல்லையே."

"அதான் சொன்னேனே, தைச்ச பிறகு எல்லாம் சரியாய் இருக்குமென்று..."

"ஓ... சரி... சரி..."

"எப்போது வருவீங்க?"

"தீபாவளி அன்னிக்குச் சாயந்தரம் வரட்டுமா?"

"பண்டிகையும் அதுவுமா வந்து சிரமப்பட வேண்டாம். முதல் நாளே வந்து வாங்கிப் போங்களேன்."

"ரொம்ப சந்தோஷம்."

**ம**றுநாள்.

வாய்க்காலில் குளித்தபோது அந்த வாயாடிச் சிநேகிதி கிளறினாள்.

"ஏன் சாந்தி, நேற்று டவுனிலிருந்து யாரோ ஒரு பையன் உங்க வீட்டுக்கு வந்தாராமே."

"ம்கும்... அவரொண்ணும் பையன் இல்லே" என்று செல்லக் கோபத்துடன் முறைத்தாள் சாந்தி.

"கோபிச்சுக்காதேடி, அம்மா. உனக்கேற்ற ஜோடி. ஆனாலும் பையன்னு சொல்றதிலே ஒண்ணும் குடிமுழுகிப் போயிடாது."

"எனக்கேற்ற ஜோடி..." மெய்மறந்தவளாய்த் தண்ணீரில் கோலம் வரைந்தாள் சாந்தி. "நிஜம்தான் மல்லிகா. உன்னைவிட்டால் மனம் விட்டுப் பேச எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்...." ஆழ்ந்த பெருமூச்சு. ஆனந்தக் கற்பனையில் மனம் லயித்ததன் அறிகுறியாய்த் தாழ்ந்த விழிகள். சாந்தியின் நீராடும் கன்னத்தில் பரவசம் நீந்தி விளையாடிற்று.

"ம்... சொல்லு."

"நான் சொல்வதை நீ தப்பாய் நினைக்க மாட்டியே!"

"ஊஹூம்."

"நேற்று அந்த ஆள் வந்துவிட்டுப் போனதிலிருந்து மனசு முழுக்க ஆகாயத்திலே பறக்கிற மாதிரி இருக்கு. சினிமாவிலே வருமே அதுமாதிரி என்னை அந்த ஆள் காதலிக்க மாட்டாரா என்ற ஏக்கத்திலேயும், வெட்கம், நாணம், குடும்பம் இதெல்லாம் மறந்துட்டு அந்த ஆள் கூடவே சுத்தணும் போலவும் ஆசை கிடந்து துடிக்குது. பார்த்த மாத்திரத்திலேயே நான் அவரது பாதத்திலே பூஜை மலராய் உதிர்ந்துட்டேண்டி."

"அடி ஆத்தி..... ஒரே நாளைக்குள் பிரமாத மாய்க் காதல் பேசுறீயே" என்று மூக்கில் விரல் வைத்தாள் மல்லிகா.

"ஒரு நாள் என்ன, உண்மையான காதலுக்கு ஒரு விநாடி கூடப் போதுமே!"

"சரிதான், போ. பத்தாவது படித்த பெண்ணாச்சே என்று பஞ்சாயத்து யூனியனிலே உனக்குத் தையல் மெஷின் வாங்கிக் கொடுத்தார்கள், பார்... அது தப்பு. பேசாமல் அவர்கள் உன்னைப் புலவர் கல்லூரியில் சேர்த்துவிட்டிருக்கணும்."

"கிண்டல் பண்ணாதே, மல்லி. உருப்படியாய் ஏதாவது யோசனை சொல்லு."

"அந்த ஆள் மீது இந்த அளவுக்கு நீ பித்தாகிவிட்டாய் என்பதை, அந்த ஆள் புரிந்து கொள்வது மிகவும் முக்கியம். அதுக்கு நீ

# இப்போது! நியூட்ரின் வழங்குகிறது...
# இன்ஸ்டன்ட் :புட்ஸ்!

## விரும்பிக் கேட்டதுமே...



## குலாப் ஜாமூன்!



ஆம் உண்மை இப்போது நியூட்ரின், இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன்களை உங்களுக்கு வழங்குகின்றது. இன்சுவை கொழிக்கும் இனிப்புப் பண்டம், நொடிகளில் தயார்! நாவினில் ஊறும் குலாப் ஜாமூன்களைத் தயாரித்து குடும்பத்தினரையும் நண்பர்களையும் வியப்பில் ஆழ்த்துங்கள். நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் உபயோகித்து, கணப்பொழுதில் தயாரித்து மகிழுங்கள்.

நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் 200 கிராம் மற்றும் 100 கிராம் பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

நீங்கள் விரும்பும் மிருதுவான தேனூறும் குலாப் ஜாமூன்களை உங்கள் அன்றாட உணவுடன் ருசித்து ரசித்துச் சாப்பிடுங்கள்.

வாழ்வில் இனியவைகளை வழங்குவோர் நியூட்ரின்!

**நியூட்ரின்**

**இன்ஸ்டன்ட்**

திகைப்பூட்டும் தித்திப்பு







ACIL/0919/85 TAM




வழங்குவோர்: இந்தியாவிலேயே மிகப்பெருமளவில் விற்பனையாகும் மிட்டாய் தயாரிப்பாளர்கள்.

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 3

**நீங்கள் போட்டியில் வெற்றி பெறாவிட்டாலும் வாழ்க்கையில் வெற்றிபெற உதவுகிற போட்டி இது.**

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் நான்கு பொன்மொழிகள் உள்ளன. கீழே நான்கு பெயர்கள் தரப்பட்டுள்ளன. எந்தப் பொன்மொழியை யார் கூறியது? கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். முக்கிய நிபந்தனை: நீங்களே உங்கள் கைப்பட பொன்மொழியை முழுதுமாய் பிழையின்றி எழுத வேண்டும். உறையின் மீது 'பொன்மொழிப் போட்டி — 3' என்று குறிப்பிடவும்.



தாகூர்

மார்க் டுவெய்ன்

சத்யசாயிபாபா

குஷ்வந்த் சிங்

**முடிவு தேதி: 4.2.1987**

பெயர்: ..............................................

விலாசம்: ..............................................

..............................................

ஏதாவது ஒரு காரியம் பண்ணணும்.''

''என்னாலே அது முடியும்'' என்றாள் சாந்தி, உறுதியான தொனியில். ''அவர் என் மனத்தில் அப்படியே அச்சாகப் பதிந்து விட்டார் என்பதை நிச்சயமாய் என்னால் எடுத்துக் காட்ட முடியும்.''

''எப்படி?''

''பார்த்துக் கொண்டே இரு.''

ஞாயிறு சாயந்தரம்.

வயலில் நீர் தேங்கி நிற்கிறது என்று அன்றைக்குப்போலவேஇன்றைக்கும்அப்பாவும், அம்மாவும் வயலுக்குப் போய் இருந்தனர்.

சாந்தி மட்டும் தனியாக இருந்தாள்.

தட்... தட்...

அவன்தான்.

''சரியாக வந்துவிட்டீர்களே...''

''இதிலென்ன ஆச்சரியம். இங்கு வந்து போனதிலிருந்து எனக்கு உங்கள் நினைவு தானே.''

'ஜிலீர்' என அவளது நெஞ்சத்தில் ஓர் இதமான தாக்கம். 'அன்றையிலிருந்து அவருக்கும் என் நினைவுதானாமே. அப்படியானால் என்னைப் போலவே அவரும் என்னை...'

''உள்ளே வாங்க...''

''தைச்சுட்டீங்களா.''

''ம்!''

சட்டையையும், பேண்ட்டையும் எடுத்துக் கொடுத்தாள்.

அறைக்குள் போய் அணிந்து பார்க்கச் சொல்லலாமா... ஊஹூம் வேண்டாம். இங்கேயே போட்டால் இப்போதே அபிப்ராயமும் சொல்லிவிட்டுப் போய்விடுவான். மறுபடியும் இங்கு வரக் கூடிய சந்தர்ப்பம் அமையாதே....

எனவே —

''வீட்டுக்குப் போய்ப் போட்டுப் பார்த்து விட்டு அப்புறமாக வந்து சொல்லுங்கள்'' என்றாள் சாந்தி.

''எப்படி இருந்தால் என்ன, யூனிபாரம் தானே!'' என்று அலட்சியமாகச் சிரித்தவன், ''கூலி'' என்றான்.

''இப்போது கூலி வாங்க மாட்டேன். முதலில் வீட்டுக்குப் போய்ப் போட்டுப் பாருங்கள். எப்படி இருக்கிறது என்று வந்து சொன்ன பிறகுதான் கூலி வாங்குவேன்.''

''மறுபடியும் ஒரு பயணமா?'' என்று சிரித்தான், அவன்.

அது வெறும் சம்பிரதாயப் பேச்சாகத் தோன்றியது சாந்திக்கு. ''நீங்கள் வரமுடியாவிட்டால் மணியார்டர்கூட அனுப்பலாமே'' என்று சாந்தியும் சம்பிரதாயமாகச் சிரித்தாள்.

''எப்படியோ, சமயத்தில் உதவினீர்கள். ரொம்ப நன்றி. நான் வர்றேன்.''

வெளியேறினான் அவன்.

வாசலுக்கு வந்து அவன் முதுகையே பார்த்துக் கொண்டிருந்தாள் சாந்தி.

அவன் தெருவைக் கடந்ததும், உலகமே அஸ்தமித்தது போல் இருந்தது, சாந்திக்கு.

செல்வ விநாயகர் கோயில்.

பூஜை முடித்து, சாந்தி வெளியே வந்த போது, மல்லிகா குறுக்கிட்டாள்.

"அர்ச்சனை பலமாய் இருக்கிறதே. என்ன விசேஷம்?"

"நேற்று அந்த ஆள் வந்தார்" என்று அவன் வந்து போனதை விவரித்தாள் சாந்தி.

"நீ சொல்வதைப் பார்த்தால் அவன் போக்கு காதலிக்கிற மாதிரி தோணலியே" புருவத்தைச் சுருக்கினாள் மல்லிகா.

"அது உண்டா இல்லையா என்பது இன்னும் இரண்டு மூன்று நாட்களில் தெரிஞ்சுடும் மல்லிகா."

"எப்படி?"

"என்னை அவர் ஒரு தையல்காரியாக மட்டும் நினைத்தால் மணியார்டர் வரும். காதலியாக மதித்தால் அவரே நேரில் வருவார்."

"நல்ல யூகம்தான்."

"அப்படி அவர் நேரில் வரணும் என்றுதான் சாமியிடம் வேண்டிக் கொண்டு வருகிறேன்."

"உன் ஆசை நிறைவேற நானும் வரம் கேட்கிறேன் சாந்தி."

அடுத்தடுத்த நாள்.

தபால்காரர் அந்தவீதியில் வரும்போதெல்லாம், 'எங்கள் வீட்டுக்கு வரக் கூடாது' என்று சாந்தியின் உள்ளம் அலை பாயும். அவள் ஏங்கியது போலவே, தபால்காரர் அவளிடம் வராமலேயே —

ஒரு வாரம் ஆயிற்று.

சாந்தியும் மல்லிகாவும் சாலையோர வாய்க்காலில் குளித்துக் கொண்டிருந்தார்கள்.

டவுனிலிருந்து வந்த பஸ் மருதமுத்துவின் கடை எதிரில் நின்றது.

"சாந்தி, பஸ் நிற்கிறது" என்றாள் மல்லிகா.

மார்புக்குச் சுற்றிக் கொண்டு, நீரை விட்டு எழும்பி எட்டிப் பார்த்தாள் சாந்தி.

அவள் விழிகள் மகிழ்ச்சியால் விரிந்தன. பஸ்ஸை விட்டு இறங்கிய ஒரே பிரயாணி, அந்த இளைஞன்.

"மல்லிகா நான் சொன்னது போல் அவர் நேரில் வந்துவிட்டாரடி."

"அதிர்ஷ்டசாலிதான் நீ. சீக்கிரம் பூக்கொல்லை வழியாக வீட்டுக்குப் போய்விடு" என்று விரட்டினாள் மல்லிகா.

வாங்க..."

"இப்பத்தான் குளிச்சுட்டு வர்றீங்க போலே..."

"ஆமாம். நாற்காலியிலே உட்காருங்க. ஒரு நிமிஷத்திலே வந்துடறேன்."

ஈரம் வடியும் ஆடையுடன் அறைக்குள் சென்ற சாந்தி, ஆடை மாற்றிக் கொண்டு வெளியில் வந்தாள்.

வரும்போதே ஒரு தட்டில் பழம், பட்சணம் இன்னொரு தட்டில் ஆவி மணக்கும் பசும் பால்.

"என்ன இதெல்லாம்?"



"நல்ல குடும்பக் கதைன்னு சொன்னீங்க, படம் முழுக்க ஒரே அடிதடியா இருக்குதே....?"

"இது 'டைரக்டரோட குடும்பக் கதை'ங்க. அப்படித்தான் இருக்கும்."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்பிரியா

"சாப்பிடுங்கள்."

வைத்துவிட்டு மறுபடியும் அறைக்குள் ஓடி சாமி படத்துக்கு முன்னால் நின்று கும்பிட்டாள். சாயந்தரம் கோயிலுக்குப் போய் சதுர்த் தேங்காய் உடைக்க வேண்டும் என்று எண்ணம் வர, மான்குட்டி போல் அவள் மனம் துள்ளியது.

"நான் மறுபடியும் இங்கு வருவேன் என்று கொஞ்சமும் நினைக்கவில்லை. கடைசியில் அப்பாவின் ஏற்பாட்டில்தான் இப்போது இங்கு வந்தேன்."

"சந்தோஷம். உங்கள் அப்பாவுக்கு எல்லாம் தெரியுமா?"

"சொன்னேன். நீங்கள் தைத்துக்கொடுத்த பேண்டைப் போட்டுக் காட்டினேன்."

"என்ன சொன்னார்?"

"அப்படியே அசந்து போய்விட்டார். என் அப்பா ஒரு பிசினஸ்மேன்."

"அப்படியா?"

"நொடிப் பொழுதில் ஒரு பெரிய திட்டத்தையே உருவாக்கிவிட்டார்."

"திட்டமா?" என்று வியந்தபோது அவளிடம் ஒரு கிளுகிளுப்பு. கல்யாணத் திட்டமாய்த்தான் இருக்கும்.

"உடம்பைத் தொடாமலே இத்தனை கனகச்சிதமாக கட்டிங் செய்து தைப்பதென்றால் சாமானியம் இல்லை. தொழிலில் ஆழ்ந்த சிரத்தை இருந்தால்தான் முடியும். இப்படி திறமையுள்ள பெண், குடத்தில் வைத்த விளக்காய் கிராமத்தில் இருக்கக் கூடாது" என்றார். நான் 'என்ன பண்ணலாம்?' என்றேன்.

"உங்களை கட்டிங் மாஸ்டராக நியமித்து டவுனில் பெரிய டைலரிங் ஷாப் ஆரம்பிக்கிறாராம். சம்பளம் ஆயிரம் ரூபாய். சம்மதம் கேட்டு வா' என்று அனுப்பி வைத்திருக்கிறார்."

முடித்தான் இளைஞன்.

"இதைச் சொல்லத்தான் வந்தீர்களா?" ஸ்மரணையற்று வாய் திறந்தாள் சாந்தி.

"ஆமாம்."

அவள் பேசவில்லை.

உடம்பைத் தொட்டால்தானா, நான்தான் உங்கள் உள்ளத்தையே தொட்டுவிட்டேனே. அதனால்தானே அத்தனை கச்சிதமாகத் தைக்க முடிந்தது. அதை நீங்கள் வியாபாரமாக்கிவிட்டீர்களே...

நெஞ்சக் கதறல் சாந்தியின் கன்னத்தில் கண்ணீர்ப் பொட்டுக்களாகச் சிந்தின.



கவிதை சொல்லும் சிற்பங்கள்



* மாணிக்கவாசகர் கட்டிய கோவில் வெளிப் பிராகாரத்தின் ஒரு தோற்றம்தான் இது.

# அழிந்து வரும் அதிசயங்கள்!

'சைவம் பெரிதா? சமணம் பெரிதா?' என்று கடும் சர்ச்சையும் போரும் நிகழ்ந்து. சமணம் தோற்றுச் சைவம் மேலோங்கிய காலம். அப்போது பல சமணத் துறவிகள் உயிருக்குப் பயந்து காடுகளிலும் மலைகளிலும் ஓடி ஒளிந்து வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்படிப்பட்ட சமணத் துறவிகளில் பதினேழு பேர் ஒளிந்து உயிர் வாழ்ந்த இடம்தான் சித்தன்னவாசல். சரித்திரப் பழைமை வாய்ந்த அந்த இடத்துக்குப் போய்ப் பார்த்தோம்.

சித்தன்னவாசலில் இருக்கும் அந்தச் சிறு குன்றின் உச்சிச் சரிவில், அந்தக் குன்று ராட்சசன் கொஞ்சம் வாயைத் திறந்தது போல, ஓர் இயற்கையான குகை. அதன் கற்தளத்தில் கால் வைத்ததுமே ஒரு ஜில்லிப்பு. வழுவழுப்பாகச் செதுக்கப்பட்ட பதினேழு படுக்கைகள். அத்தனையிலும் படுக்கையோடு இணைந்து செதுக்கப்பட்ட தலையணைகள். உட்கார்ந்து தியானம் செய்தால், அட்டகாசம் செய்யும் ஐம்புலன்களும் அடங்கி, ஒடுங்கிச் செயலிழந்து மனம் பூஜ்ஜியமாகி விடும்



* சித்தன்னவாசல்: அழிந்துவிட்ட ஓவியங்கள்

அமைதி அந்தக் குகையில். சமணர்கள் பார்த்தால் சமணத் துறவிகள் நினைவுக்கு வர, பக்தி சிரத்தையோடு வணங்குவார்கள். சரித்திர ஆராய்ச்சியாளர் பார்த்தால் அந்தக் காலகட்டத்துச் சரித்திர நிகழ்ச்சிகள் மனக் கண்ணில் விரியும். பற்பல கதைகள் கூறும் அந்தக் குகையும் படுக்கைகளும்!



அழிந்து வரும் கற்சங்கலிகள்

கந்தூண்களில் எம்ப்ராய்டரி அதிசயங்கள்



ஆனால் இன்று அந்தப் படுக்கைகள் எப்படி இருக்கின்றன? அங்கு செல்லும் சுற்றுப் பயணிகள் அதை எந்த அளவுக்கு மதித்துப் பார்க்கிறார்கள் என்றால், மனத்தில் வேதனை தான் மிஞ்சுகிறது. ஆம்; அங்குள்ள ஒவ்வொரு படுக்கையிலும், 'அ. வைத்தி — B. பானுமதி (மயிலாடுதுறை), P.S. பீட்டர் — விமலா, குமார்—தனம்...' என்று ஏதோ இந்த அல்ப ஜோடிகள்தான் அந்தப் படுக்கைகளையே உபயம் செய்த மாதிரித் தங்கள் பெயர்களை அங்கங்கே கன்னாபின்னாவென்று பொறித்துவிட்டு வந்திருக்கிறார்கள். பார்க்கப் பார்க்க நெஞ்சு குமுறுகிறது.

இதுதான் இப்படியென்றால் குன்றின் மறு பக்க அடிவாரத்தில் இருக்கும் அறிவர் குகைக் கோயிலும், அங்குள்ள அர்த்த மண்டபத்தில் வரையப்பட்டிருக்கும் அஜாந்தா ஓவியத்துக்குச் சமமான வண்ண வண்ண ஓவியங்களும் எப்படியிருக்கின்றன? கி.பி. ஏழாம் நூற்றாண்டில் மகேந்திர வர்ம பல்லவனால் உருவாக்கப்பட்ட இந்தக் குகைக் கோயிலும் சரி, ஓவியங்களும் சரி, இன்று பார்த்துப் புரிந்து கொண்டு பெருமைப் படும் நிலையில் இல்லை. ஓவியங்களெல்லாம் மிக மோசமான அளவுக்குச் சிதிலமடைந்து உருமாறிப் போய்விட்டன.



காரயணிய சாஸ்திரிகள்

இத்தனைக்கும் இவை மத்திய தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் கட்டுப்பாட்டுக்குள்தான் இருக்கின்றன. 'பழைமை அப்படியே பாதுகாக்கப்பட வேண்டும்' என்ற உயரிய காரணத்துக்காகத்தான், பழைமையான இடங்களையெல்லாம், தொல்பொருள் ஆராய்ச்சித் துறை தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருகிறது. ஆனால், சித்தன்ன வாசலைப் பொருத்தவரை எல்லாமே தலைகீழாகிவிட்டது. ஒரு பாதுகாப்பும் இல்லை. இந்நிலையில் இதற்கு ஒரு தொல்பொருள் ஆராய்ச்சித் துறை எதற்கு? பேசாமல் உள்ளூர்ப் பஞ்சாயத்திடம் ஒப்படைத்து விட்டுப் போக வேண்டியதுதானே!



புகழ் பெற்ற ஓவியங்கள் இருக்கும் சித்தன்ன வாசல் குடைவரைக் கோயில்

சரி, தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் கீழுள்ள சித்தன்னவாசலுக்குத்தான் இந்தக் கதி என்றால், முழுக்க முழுக்கத் திருவாவடுதுறை ஆதீனப் பொறுப்பில் இருக்கும் ஆவுடையார் கோயிலின் நிலை என்ன? அரிமர்த்தன பாண்டியன் அமைச்சரவையில் அமைச்சராக இருந்த மாணிக்கவாசகப் பெருமானே கட்டிய கோயிலாயிற்றே அது என்ற எதிர்பார்ப்போடு அங்கு சென்றோம்.

திருப்பெருந்துறை என்று மாணிக்கவாசகரால் பக்தி மணம் கமழப் பாடிய ஆவுடையார் கோயில் ஆத்மநாத சுவாமி சன்னதி தெற்குப் பார்த்திருப்பதே எங்கு

கள். அதிசயப்பட வைக்கும் சிற்ப வேலைப் பாடுகளைப் பார்த்துக் கொண்டே, சுற்றிப் பார்க்க ஆரம்பிக்கிறோம். ''இங்கே பாருங்கள். இங்கே இருபத்தெட்டு நட்சத்திரங்களின் உருவங்களும் செதுக்கி வைக்கப்பட்டுள்ளது. நட்சத்திரங்கள் இருபத்தேழு தானே? இருபத்தெட்டாவது எங்கிருந்து வந்தது என்பீர்கள். ரேவதிக்கும் அசுவனிக்கும் இடையிலுள்ளதுதான் இருபத்தெட்டாவது நட்சத்திரம். அபிஜித் என்று அதற்குப் பெயர். இது எங்குமில்லாத அதிசயம்....'' என்றார் அவர்.

கோயிலை வலம் வரப் புறப்பட்டோம். முதலில் தென்பட்டது அசுத்தமான திருக்குளம். வலம் வரவே தயக்கமடையச் செய்யும் அளவுக்குப் புதர்களால் மண்டிக் கிடக்கும் செடி கொடிகள். இத்தனைக்கும் சில நாட்களுக்கு முன்புதான் குன்றக்குடி அடிகளார் வந்து தமது தலைமையில் அவற்றையெல்லாம் சுத்தப்படுத்திவிட்டுச் சென்றாராம். கோயிலின் பின்பக்கத்திலுள்ள பெரிய கல் மண்டபத்திற்குச் சென்றோம்.

''இதுதான் கற்சங்கிலி. அண்ணாந்து



* கவிதை....



* ..... சொல்லும் சிற்பங்கள்



* அசிங்கப்பட்டுக் கொண்டிருக்கும் சமணர் படுக்கைகள்.

பாருங்கள் தெரியும்!'' என்றார் சாஸ்திரிகள்.

பார்த்தோம். சும்மா அடையாளத்திற்கு இரண்டு மூன்று கண்ணிகள்தான் இருந்தன. ஒருகாலத்தில் அவை மண்டபத்தின் மேற் கூரையிலிருந்து தரை அளவுக்கு நீண்டு தொங்கிக் கொண்டிருந்ததாகவும் இப்போது அவையெல்லாம் உடைந்து இரண்டு மூன்று கண்ணிகள் அளவுக்கு வந்துவிட்டதாகவும் சொன்னார்கள். இன்னும் சில ஆண்டுகளில் இவையும் போய்விடும் நிலைதானா? வருத்தத்தோடு சாஸ்திரிகளை விசாரித்தபோது, ''பழைய ஆராய்ச்சியெல்லாம் நமக்கெதுக்கு சார்?'' என்று முற்றுப் புள்ளி வைத்துவிட்டு மற்ற அதிசயங்களுக்குப் போய்விட்டார்.

''இதோ, இந்த இடத்தில் மண்டபத்தின் கூரையைப் பாருங்கள். இருபுறமும் இருந்து

மில்லாத ஓர் அதிசயம். கோயிலுக்குள் நுழையும் முன்பே, குரங்காக அலையும் மனத்தைக் கட்டுப்படுத்தி, உடும்புப் பிடியாக இறைவனின் திருப் பாத கமலங்களைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்ற தத்துவத்தை உணர்த்தும் குரங்கும் உடும்பும் சிற்பம்.

நாம் ஒருவித பிரமிப்போடும் பக்தியோடும் உள்ளே நுழையும்போதே நமக்கு வழி காட்ட முன்வருகிறார் சுப்ரமணிய சாஸ்திரி



* ஆவுடையார்கோவில்: கோபுர தரிசனம்: கோடி புண்ணியம்



* எந்தச் சிற்பியாலும் செதுக்க முடியாத கொடுங்கை (Sunshade)

வரும் கற்பலகைகளுக்குப் பிடிப்பு ஏதாவது இருக்கிறதா? இல்லவே இல்லை. அப்படியே அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருக்கின்றன. அந்தக் காலத்திலேயே அப்படியொரு சயன்ஸ்! இந்தக் கல்தூணில் பாருங்கள் எப்படிப்பட்ட எம்ப்ராய்டரி ஒர்க்குன்னு. கல்லிலேயே இப்படிக் கவிதை வடிச்சிருக்காங்க. அப்புறம் இந்தக் கொடுங்கை (sunshade). மண்டபங்களைச் சுற்றி இப்படியோர் அமைப்பு. குருவாயூர்க் கோவிலில் மரத்தால் செய்திருக்கிறார்கள். ஆனால் இங்கு அத்தனையும் கல். பாருங்கள், கல்லிலேயே இன்றிருப்பது போன்ற உருண்டைக் கம்பி, முறுக்குக் கம்பி, சதுரக் கம்பி, பட்டைக் கம்பி.... என்று எப்படியெப்படியெல்லாம் செதுக்கி அதிசயம் பண்ணியிருக்கிறார்கள் என்று. அப்போதும் சரி, இப்போதும் சரி, சிற்பிகளிடம் சிற்ப வேலைப்பாடுகளுக்கான ஒப்பந்தம் போடும்போது, 'ஆவுடையார் கோவிலிலுள்ள கொடுங்கை வேலைப்பாடுகளைத் தவிர மற்ற சிற்ப வேலைப்பாடுகளைச் செய்கிறோம்' என்றுதான் சிற்பிகள் எழுதிக் கொடுப்பார்களாம். அந்த அளவுக்குச் சிறப்பு வாய்ந்தது இது....

"இதுதான் தல விருட்சம். குருந்தை மரம். குருந்தை மரத்தடியில்தான் சிவபெருமான் மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்தார். அதனால்தான் தல விருட்சமாகிவிட்டது. இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் மூன்று மூன்று பகுதிகளாகப் பிரிந்திருக்கிறது. மூன்றிலும் மூன்று வாசனைகள். நீங்களே பாருங்கள்...." வழிகாட்டிய அந்த சாஸ்திரிகள் சொன்னபடி கசக்கி முகர்ந்து பார்த்தபோது, மூன்று வாசனைகள் வந்தன.

"திருவாசகம் பிறந்த தலம் இதுதான். அதனால்தான் இங்கே சுவாமிக்கு விழா வேதும் எடுப்பதில்லை. ஆனித் திருமஞ்சனத்திலும் மார்கழித் திருவாதிரையிலும் மாணிக்கவாசகருக்கே விழா எடுக்கப்படுகிறது. இதுவும் ஓர் அதிசயம். இப்படிப் பல அதிசயங்கள்! 'விழாவை ஆண்டுதோறும் மிகச் சிறப்பாகக் கொண்டாட அருள்புரிகிறார் திருவாவடுதுறை ஆதீனத்தின் 23—வது மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்' என்று கட்டாயம் நீங்கள் எழுத வேண்டும்!" என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டார் சாஸ்திரிகள்.

நாங்கள் சென்றிருந்தபோதும் மார்கழித் திருவாதிரை விழா மிகச் சிறப்பாகத்தான் நடந்து கொண்டிருந்தது. அது பற்றியெல்லாம் நமக்கும் கருத்து வேறுபாடே இல்லை. ஆனால், மாணிக்கவாசகப் பெருமானே கட்டிய — உலகமே வியந்து பார்த்துப் பிரமிக்கும் பல்வேறு, அதிசயங்களை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற அந்தக் கோவிலின் பராமரிப்பும் பாதுகாப்பும் ஏன் இப்படிக் கைவிடப்பட்டிருக்கின்றன? படிப்படியாகச் சிதிலமடைந்துவிடாமல் அந்த அதிசயக் கோவிலைக் காப்பாற்றுங்கள், ப்ளீஸ்!

— இளங்கோவன்

# இளம் பிரதமருக்கு...

நம் நாட்டில் நடந்துள்ள இவ்வளவு துயர நிகழ்ச்சிகளுக்குப் பிறகும்கூட, எல்லாப் பிரச்சினைகளையும் தீர்த்து மக்கள் அனைவரையும் நிம்மதியாக வாழ வைக்கும் காலம் கடந்து விடவில்லை... ஆகவே ''செய்'' என்று ஒரே ஒரு வார்த்தை சொல்லி ஆணை இடுங்கள்... ஒன்பதே நாளில் இந்தியாவை ''சொர்க்க பூமி'' ஆக்கிக் காட்டுகிறோம் என்கிறது ...... சுமங்கலி ஹோம் இண்டஸ்ட்ரீஸ், கை முறுக்கு சுட்டு விற்பதை ஜீவனமாகவும், தாய்நாட்டைச் சுபிட்சமாக்குவதை வாழ்வின் லட்சியமாகவும் கொண்ட சின்னஞ் சிறிய நிறுவனம், 34, கான்சா மேட்டுத் தெரு, மதுரை — 1.

— ஆத்மாஸ்.




## ஐந்தாம் அத்தியாயம்

# குரவைக் கூத்து

அந்தப் புரத்திலிருந்து நண்பர்கள் இருவரும் வெளியே வந்தார்கள். உள்ளேயிருந்து, ஒரு பெண் குரல், ''கந்தமாறா! கந்தமாறா!'' என்று அழைத்தது.

''அம்மா என்னைக் கூப்பிடுகிறாள். இங்கேயே சற்று இரு! இதோ வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கந்தமாறன் உள்ளே போனான். பெண்களின் குரல்கள் பல சேர்ந்தாற்போல் அடுத்தடுத்துக் கேள்விகள் கேட்டதும், கந்தமாறன் தட்டுத் தடுமாறி மறுமொழி கூறியதும் வந்தியத்தேவன் காதில் விழுந்தது. பின்னர் அந்தப் பெண்கள் கலகலவென்று சிரித்த ஒலியும் உள்ளேயிருந்து வந்தது.

தன்னைப் பற்றித்தான் அவ்விதம் அவர்கள் கேலி செய்து சிரிக்கிறார்களோ என்ற எண்ணம் வந்தியத் தேவனுக்கு வெட்கத்தையும் கோபத்தையும் உண்டாக்கியது. கந்தமாறன் வெளியேவந்ததும்வந்தியத்தேவனின் கையைப் பிடித்துக் கொண்டு, ''வா! எங்கள் மாளிகையைச் சுற்றிப் பார்த்துவிட்டு வரலாம்!'' என்று சொல்லி இழுத்துக் கொண்டு போனான்.

கடம்பூர் மாளிகையின் நிலா முற்றங்கள், ஆடல் பாடல் அரங்கங்கள், பண்டக சாலைகள், பளிங்கு மண்டபங்கள், மாட கோபுரங்கள், ஸ்தூபி கலசங்கள், குதிரை லாயங்கள் ஆகிய வற்றை வந்தியத் தேவனுக்குக் கந்தமாறன் காட்டிக் கொண்டு சென்றான்.

இடையில், வந்தியத்தேவன், ''கந்தமாறா! என்னை அந்தப்புர வாசலில் நிறுத்தி நீ மறுபடியும் உள்ளே போன போது, அந்தப்புரத்தில் ஒரே சிரிப்பும்



குதூகலமுமாயிருந்ததே, என்ன விசேஷம்? உன்னுடைய சிநேகிதனைப் பார்த்ததில் அவர்களுக்கு அவ்வளவு சந்தோஷமா?'' என்று கேட்டான்.

''உன்னைப்பார்த்ததில்அவர்களுக்கெல்லாம் சந்தோஷந்தான். உன்னை அம்மாவுக்கும் மற்றவர்களுக்கும் பிடித்திருக்கிறதாம். ஆனால் உன்னைக் குறித்து அவர்கள் சிரிக்கவில்லை....''

''பின்னே எதற்காகச் சிரித்தார்களாம்!''

''பழுவேட்டரையர் இருக்கிறார் அல்லவா? இத்தனை வயதுக்குப் பிறகு அவர் புதிதாக ஒரு இளம் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டிருக்கிறார். மூடு பல்லக்கில் வைத்து அவளை இங்கே அழைத்துக் கொண்டு வந்திருக்கிறார். ஆனால் அந்தப்புரத்துக்கு அவளை அனுப்பாமல் அவருடைய விடுதியிலேயே அடைத்துப் பூட்டி வைத்திருக்கிறாராம்! அந்தப்பெண்ணை பலகணி வழியாக எட்டிப் பார்த்துவிட்டு வந்த ஒரு தாதிப் பெண் அவள் அழகை வர்ணித்தாளாம். அதைக் குறித்துத்தான் சிரிப்பு! அவள் சிங்களப் பெண்ணோ கலிங்கத்துப் பெண்ணோ அல்லது சேர நாட்டுப் பெண்ணோ



என்று சர்ச்சை செய்கிறார்கள்! பழுவேட்டரையரின் முன்னோர்கள் சேர நாட்டிலிருந்து தமிழகத்துக்கு வந்தவர்கள் என்று உனக்குத் தெரியும் அல்லவா?''

''கேள்விப்பட்டிருக்கிறேன். ஏன், நீதான் முன்னொரு தடவை சொல்லியிருக்கிறாய். இருக்கட்டும்,,கந்தமாறு! பழுவேட்டரையர் இந்த மர்ம சுந்தரியான மங்கையை மணந்து எத்தனை காலம் ஆகிறது?''

''இரண்டு ஆண்டுக்குள்ளேதான் இருக்கும். மணம் செய்து கொண்டதிலிருந்து அவளைத் தனியாகச் சிறிது நேரங்கூட அவர் விட்டு வைப்பதில்லையாம்! எங்கே போனாலும்கூடப் பல்லக்கில் ஆசை நாயகியையும் அழைத்துப் போகிறார். இதைக் குறித்து நாடெங்கும் கொஞ்சம் பரிகாசப் பேச்சு நடந்து வருகிறது. வந்தியத் தேவா! ஒருபிராயத்தைத்தாண்டியவர்களுக்கு இந்த மாதிரி ஸ்திரீ சபலம் ஏற்பட்டால் எல்லோருக்கும் சிறிது இளக்காரமாகத்தானே இருக்கும்?''

''காரணம் அது ஒன்றுமில்லை. உண்மைக் காரணத்தை நான் சொல்லட்டுமா கந்தமாறு? பெண்களே எப்போதும் சற்றுப் பொறாமை பிடித்தவர்கள். உன் வீட்டுப் பெண்களைப் பற்றிக் குறைவாகச் சொல்லுகிறேன் என்று நினைக்காதே! பெண் உலகமே இப்படித்தான்! உன் குடும்பத்துப் பெண்



கள் கருநிறத்து அழகிகள். பழுவேட்டரையரின் ஆசை நாயகியோ செக்கச் செவேலென்று பொன்னிறமாயிருக்கிருள். ஆகையால் அவளை இவர்களுக்குப் பிடிக்கவில்லை! அது காரணமாக வேறு ஏதேதோ கதை கட்டிச் சொல்கிருர்கள்....!

''அடே! இது என்ன விந்தை! உனக்கு எப்படி அவளுடைய நிறத்தைப் பற்றித் தெரியும்? அவளை நீ பார்த்திருக்கிருயா, என்ன? எங்கே, எப்படிப் பார்த்தாய்? பழுவேட்டரையருக்கு மட்டும் இது தெரிந்தால், உன் உயிர் உன்னுடையது அல்ல....!''

''கந்தமாரு! இதற்கெல்லாம் நான் பயந்தவன் அல்ல. அது உனக்குத் தெரியும். மேலும் நான் அனுசிதமான காரியம் எதுவும் செய்யவும் இல்லை. வீர நாராயணபுரத்தில் பழுவேட்டரையரின் பரிவாரங்கள் சாலையோடு சென்றபோது கூட்டத்தோடு கூட்டமாய் நானும் சாலை ஓரமாக ஒதுங்கி நின்று பார்த்துக் கொண்டிருந்தேன். யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் எல்லாம் நீங்கள் அனுப்பி வைத்த மரியாதைகளாமே? அது உண்மையா?''

''ஆம், நாங்கள்தான் அனுப்பி வைத்தோம். அதனால் என்ன...?''

''அதனால் என்ன? ஒன்றுமில்லை. பழுவேட்டரையருக்கு நீங்கள் அளித்த வரவேற்பு மரியாதைகளையும் எனக்கு அளித்த வரவேற்பையும் ஒப்பிட்டுப்

பார்த்தேன். வேறொன்றும் இல்லை...!"

கந்தமாறன் இலேசாகச் சிரித்து விட்டு, "இறை விதிக்கும் அதிகாரிக்குச் செலுத்த வேண்டிய மரியாதையை அவருக்குச் செலுத்தினோம். சுத்த வீரனுக்கு அளிக்கவேண்டிய வரவேற்பை உனக்கு அளித்தோம்! ஒரு காலத்தில், முருகன் அருளால், நீ இந்த வீட்டுக்கு மருமகப் பிள்ளையானால் தக்கவாறு மாப்பிள்ளை மரியாதை செய்து வரவேற்போம்!" என்றான். பிறகு, "வேறு என்னமோ சொல்ல வந்தாய்; அதற்குள் பேச்சு மாறிவிட்டது. ஆம், பழுவேட்டரையருடைய ஆசை நாயகி நல்ல சிவப்பு நிறம் என்று சொன்னாயே, அது எப்படி உனக்குத் தெரிந்தது?" என்றான்.

"கடம்பூர் மாளிகையின் கரிய பெரிய மத்தகஜத்தின் மீது பழுவேட்டரையர், எருமைக் கடா மீது யமதர்மன் வருவதுபோல் வந்து கொண்டிருந்தார்! என்னுடைய ஞாபகமெல்லாம் அவர்மேலே தானிருந்தது. ஒரு காலத்தில் அவரைப் போல் நானும் ஆக வேண்டும் என்று மனோராஜ்யம் செய்து கொண்டிருந்தபோது அடுத்தாற்போல் ஒரு மூடு பல்லக்கு வந்தது. மூடு பல்லக்கில் யார் வரக் கூடும் என்று நான் யோசித்துக் கொண்டிருந்தபோதே, பல்லக்கின் திரையை உள்ளிருந்து ஒரு கை சிறிது விலக்கியது. விலக்கிய திரை வழியாக ஒரு முகமும் தெரிந்தது. கையும் முகமும் நல்ல பொன்நிறமாயிருந்தன! அவ்வளவுதான் நான் பார்த்ததெல்லாம்! நீ இப்போது சொன்னதிலிருந்து அந்தப் பெண்தான் பழுவேட்டரையரின் ஆசை நாயகி என்று ஊகிக்கிறேன்."

"வந்தியத் தேவா! நீ அதிர்ஷ்டக்காரன். ஆண்பிள்ளை எவனும் அந்தப் பழுவூர் இளைய ராணியைக் கண்ணாலும் பார்த்ததில்லை என்று பேச்சு. ஒரு விநாடி நேரமாவது அவள் கரத்தையும் முகத்தையும் நீ பார்த்தாயல்லவா? பார்த்தவரையில் அவள் எந்த தேசத்திலே பிறந்த சுந்தரியாயிருக்கலாம் என்று உனக்கு ஏதாவது உத்தேசம் தோன்றுகிறதா?" என்று கந்தமாறன் கேட்டான்.

"அச்சமயம் நான் அதைப் பற்றி யோசிக்கவில்லை. இப்போது எண்ணிப் பார்க்கும்போது, அவள் ஒருவேளை காஷ்மீர தேசத்துப் பெண்ணாயிருக்கலாம்; அல்லது கடல்களுக்கு அப்பாலுள்ள சாவகம், கடாரம், யவனம், மிசிரம் முதலிய நாடுகளிலிருந்து வந்த பெண்ணரசியாகவும் இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஒருவேளை அரபு தேசத்துப் பெண்ணாக இருந்தாலும் இருக்கலாம். அந்த நாட்டிலேதான் பெண்கள் பிறந்தது முதல் இறக்கும்வரையில் முகமூடி போட்டே வைத்திருப்பார்களாம்...!"

அச்சமயம் எங்கேயோ சமீபத்திலிருந்து வாத்தியங்களின் முழக்கம் கேட்கத் தொடங்கியது. சல்லி, கரடி, பறை, புல்லாங்குழல், உடுக்கு ஆகியவை சேர்ந்து சப்தித்தன.

"இது என்ன முழக்கம்?" என்று வந்தியத் தேவன் கேட்டான்.

"குரவைக் கூத்து நடக்கப் போகிறது! அதற்கு ஆரம்ப முழக்கம் இது! நீ குரவைக் கூத்துப் பார்க்க விரும்புகிறாயா? அல்லது சீக்கிரம் உணவு அருந்திவிட்டு நிம்மதியாகப் படுத்துத் தூங்குகிறாயா?"

ஆழ்வார்க்கடியான் குரவைக் கூத்தைப் பற்றிக் குறிப்பிட்டது அச்சமயம் வந்தியத் தேவனுக்கு நினைவு வந்தது.

"குரவைக் கூத்து நான் பார்த்ததேயில்லை; கட்டாயம் பார்க்க வேண்டும்" என்றான். அந்த நண்பர்கள் இன்னும் சில அடி தூரம் சென்று ஒரு திருப்பத்தில் திரும்பியதும் குரவைக் கூத்து மேடை அவர்களுடைய கண்களுக்குப் புலனாயிற்று. மேடைக்கு முன்னால் சபை கூடவும் தொடங்கி விட்டது.

சுற்றிலும் அரண்மனைச் சுவரும் கோட்டை கொத்தளங்களின் மதிளும் சூழ்ந்த இடத்தில், வெண் மணல் விரித்த விசாலமான முற்றத்தில் குரவைக் கூத்து மேடை அமைக்கப்பட்டிருந்தது. மேடையில் கோழியைப் போலும் மயிலைப் போலும் அன்னத்தைப் போலும் சித்திரங்கள்

போட்டு அலங்கரித்திருந்தார்கள். செந்நெல்லை வறுத்த வெள்ளிய பொரிகள், மஞ்சள் கலந்த தினையரிசிகள், பலநிற மலர்கள், குன்றி மணிகள் முதலியவற்றினாலும் அந்த மேடையை அழகுபடுத்தியிருந்தார்கள். குத்து விளக்குகளுடன் தீவர்த்திகளும் சேர்ந்து எரிந்து இருளை விரட்ட முயன்றன. ஆனால் நறுமண அகில் புகையுடன் தீவர்த்திப் புகையும் சேர்ந்து, மூடு பனியைப் போல் பரவி, தீபங்களின் ஒளியை மங்கச் செய்தன. மேடைக்கு எதிரிலும் பக்கங்களிலும் வாத்தியக்காரர்கள் உட்கார்ந்து அவரவர்களுடையவாத்தியங்களை ஆவேசமாக முழங்கினார்கள். மலர் மணம், அகில் மணம், வாத்திய முழக்கம் எல்லாமாகச் சேர்ந்து வந்தியத் தேவனுடைய தலை சுற்றும்படி செய்தன.

முக்கிய விருந்தாளிகள் அனைவரும் வந்து சேர்ந்ததும், குரவைக் கூத்து ஆடும் பெண்கள் ஒன்பது பேர் மேடைக்கு வந்தார்கள். ஆட்டத்திற்குத் தகுந்தவாறு உடம்பை இறுக்கி ஆடை அணிந்து, உடம்போடு ஒட்டிய ஆபரணங்களைப் பூண்டு, கால்களில் சிலம்பு அணிந்து, கண்ணி, கடம்பம், காந்தள், குறிஞ்சி, செவ்வலரி ஆகிய முருகனுக்கு உகந்த மலர்களை அவர்கள் சூடியிருந்தார்கள். மேற்கூறிய மலர்களினால் சுதம்பமாகத் தொடுத்த ஒரு நீண்ட மலர் மாலையினால் ஒருவரையொருவர் பிணைத்துக் கொண்டவாறு, அவர்கள் மேடையில் வந்து நின்றார்கள். சிலர் கைகளில் சந்தன மரத்தினால் செய்து வர்ணம் கொடுத்த அழகிய பச்சைக் கிளிகளை லாகவமாக ஏந்திக் கொண்டிருந்தார்கள்.

சபையோருக்கு வணக்கம் செய்துவிட்டுப் பாடவும் ஆடவும் தொடங்கினார்கள். முருகனுடைய புகழைக்கூறும் பாடல்களைப் பாடினார்கள். முருகனுடைய வீரச்செயல்களைப்பாடினார்கள். சூரபத்மன், கஜமுகன் முதலிய அசுர கணங்களைக் கொன்று கடல் நீரை வற்றச் செய்த வெற்றி வேலின் திறத்தைப் பாடினார்கள். தேவலோகத்துக் கன்னியர் பலர் முருகனை மணந்து கொள்ளத் தவங்கிடந்து வருகையில், அந்தச் சிவகுமாரன் மண்ணுலகத்தில் தமிழகத்துக்கு வந்து, காட்டில் தினைப் புனம் காத்து நின்ற மலைக் குறவர் மகளை மணந்து கொண்டதைப் புகழ்ந்து பாடினார்கள். வேலனுடைய கருணைத் திறத்தைக் கொண்டாடினார்கள் - இத்தகைய பாடலும் ஆடலும் பறை ஒலியும் குழல் ஒலியுமாகச் சேர்ந்து பார்த்திருந்தவர்களையெல்லாம் வெறி கொள்ளச் செய்தன.

**"பசியும் பிணியும் பகையும் அழிக! மழையும் வளமும் தனமும் பெருக!"**

என்ற வாழ்த்துக்களுடன் குரவைக் கூத்து முடிந்தது. பெண்கள் மேடையிலிருந்து இறங்கிச் சென்றார்கள்.

பின்னர், 'தேவராளன்' 'தேவராட்டி' என்னும் ஆடவனும், பெண்ணும் வேலனாட்டம் ஆடுவதற்காக மேடை மீது வந்து நின்றனர். அவர்கள் இரத்த நிறமுள்ள ஆடைகளை உடுத்தியிருந்தனர். செக்கச் சிவந்த இரத்தநிறமுள்ள செவ்வலரிப் பூமாலைகளைச் சூட்டிக் கொண்டிருந்தனர். நெற்றியில் செந்நிறக் குங்குமத்தை அப்பிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய வாய்களும் வெற்றிலைப் பாக்கு மென்றதினால் சிவந்து இரத்த நிறமாகக் காணப்பட்டன. கண்கள் கோவைப் பழம் போலச் சிவந்திருந்தன.

முதலில் சாந்தமாகவே ஆட்டம் ஆரம்பித்தது. தனித் தனியாகவும் கைகளைக் கோத்துக் கொண்டும் ஆடினார்கள். நேரமாக ஆக, ஆட்டத்தில் வெறி மிகுந்தது. மேடையிலே ஒரு பக்கத்தில் சாத்தியிருந்த வேலைத் தேவராட்டி கையில் எடுத்துக் கொண்டாள். தேவராளன் அதை அவள் கையிலிருந்து பிடுங்க முயன்றான். தேவராட்டி தடை செய்தாள். இறுதியில் தேவராளன் மேடை அதிரும்படியாக ஒரு பெரிய குதிகுதித்து, ஒரு பெரிய தாண்டல் தாண்டி, தேவராட்டி கையிலிருந்த வேலை பிடுங்கிக் கொண்டான். தேவராட்டி அந்த வேலைக் கண்டு அஞ்சிய பாவனையுடனே மேடையிலிருந்து இறங்கிவிட்டாள்.

பிறகு, தேவராளன் தனியே மேடை மீது நின்று கையில் வேல் பிடித்து

வெறியாட்டம் ஆடினன். சூரன் முதலிய அசுர கணங்கள் தவிடு பொடியாகிவிழுந்தனர். அறுக்கப்பட்டசூரன் தலை திரும்பத் திரும்ப முளைத்தது. முளைக்க முளைக்க வேலனுடைய உக்கிரம் அதிகமாக வளர்ந்தது. அவனுடைய கண்ணிலிருந்து தீப்பொறி பறந்தது. கடைசியில் சூரபதுமன் இறந்து விழுந்தான். தேவராளனும் கை வேலைக் கீழே போட்டான்.

இப்போது மற்ற வாத்தியங்கள் எல்லாம் நின்றுவிட்டன. உடுக்கின் சத்தம் மட்டும் கேட்டது. மேடைக்கு அருகே நின்று பூசாரி ஆவேசமாக உடுக்கு அடித்தான். தேவராளன் உடம்பில் ஒவ்வொரு அணுவும் பதறி ஆடியது. "சந்நதம் வந்துவிட்டது" என்று சபையில் ஒருவருக்கொருவர் மெதுவாகப் பேசிக் கொண்டார்கள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பூசாரி ஆவேசம் வந்து ஆடிய தேவராளனைப் பார்த்து, "வேலா! முருகா! தேவசேநாபதி! கந்தா! சூர சம்ஹாரா! அடியார்களுக்கு அருள் வாக்குச் சொல்ல வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டான்.

"கேளடா! சொல்லுகிறேன்! என்ன வேண்டுமோ, கேள்!" என்று சந்நதம் வந்தவன் கூவினன்.

"மழை பொழியுமா? வெள்ளம் பெருகுமா? நாடுசெழிக்குமா? நினைத்த காரியம் கைகூடுமா?" என்று பூசாரி கேட்டான்.

"மழைபொழியும்! வெள்ளம்பெருகும்! நாடு செழிக்கும்! நினைத்த காரியம் கைகூடும்! ஆனல், என் அன்னைக்கு நீங்கள் பூசை போடவில்லை. துர்க்கை பலி கேட்கிறள்! பத்திரகாளி பலி கேட்கிறள். மகிடாசுரனை வதைத்த சண்டிகேசுவரி பலி கேட்கிறள்....!" என்று சந்நதக்காரன் ஆவேசத்துடன் ஆடிக் கொண்டே அலறினன்.



"என்ன பலி வேண்டும்?" என்று பூசாரி கேட்டான்.

"கேட்டால் கொடுப்பீர்களா?" என்றான் வெறியாடியவன்.

"கொடுப்போம்; கட்டாயம் கொடுப்போம்!" என்றான் பூசாரி.

"மன்னர் குலத்து இரத்தம் கேட்கிறள். ஆயிரங் கால அரசர் குலத்து இரத்தம் கேட்கிறள்!" என்று வெறியாடியவன் கோர பயங்கரக் குரலில் கூவினன்.

மேடைக்கு முன்னல் வீற்றிருந்த பழுவேட்டரையர், சம்புவரையர், மழவரையர் முதலிய பிரமுகர்கள் ஒருவருடைய முகத்தை ஒருவர் நோக்கினர்கள். அவர்களுடைய செக்கச் சிவந்த வெறி கொண்ட கண்கள் சங்கேதமாகப் பேசிக் கொண்டன.

சம்புவரையர் பூசாரியைப் பார்த்துத் தலையை அசைத்து சமிக்ஞை செய்தார்.

பூசாரி உடுக்கு அடிப்பதை நிறுத்தினன். வெறியாட்டம் ஆடிய தேவராளன் அடியற்ற மரம்போல் மேடை மீது விழுந்தான். தேவராட்டி ஓடி வந்து அவனைத் தூக்கி எடுத்துக் கொண்டு போனள்.

சபை மௌனமாகக் கலைந்தது. வெளியில் எங்கேயோ தூரத்தில் நரிகள் ஊளையிடும் சத்தம் கேட்டது.

இத்தனை நேரம் பார்த்துக் கேட்டவற்றினல் பரபரப்புக்குள்ளாகியிருந்த வந்தியத்தேவன், நரிகள் ஊளையிடும் சத்தம் வந்த திசையை நோக்கினன். அங்கே, அம்மாளிகையின் வெளி மதில் சுவரின் மீது ஒரு தலை தெரிந்தது. அது ஆழ்வார்க்கடியானுடைய தலைதான்! ஒருகணம் வந்தியத்தேவன் ஒரு பயங்கர உணர்ச்சிக்கு உள்ளானன். ஆழ்வார்க்கடியானுடைய தலையை வெட்டி அந்த மதிள் மேல் வைத்திருந்தது போன்ற பிரமை உண்டாயிற்று. கண்ணிமைகளை மூடித் திறந்து பார்த்தபோது அந்தத் தலையை அங்கேகாணவில்லை! அத்தகையவீண் சித்தப்பிரமைக்குத் தான் உள்ளானது குறித்து வெட்கமடைந்தான். இது வரை அநுபவித்து அறியாத வேறு பல வகை உணர்ச்சிகளும் அவன் உள்ளத்தைக் கலங்கச் செய்தன.

(தொடர்ச்சி 33—ஆம் பக்கம்)



உங்களுக்கு, உங்களுடைய ஃப்ளோர் பிடிக்கவில்லையா?

ULKA-RH-1-86 TAM

நாகார்ஜுன சாகர் — ஒரு காலத்தில் போற்றி வணங்கப்பட்ட பௌத்த சாஸ்திர ஞான பீடமாக விளங்கியது. ஹைதராபாதிலிருந்து 150 கிலோ மீட்டர் தொலைவு தான். பண்டைய கலாச்சாரம் மற்றும் நவீன பொறி இயலின் மிகவும் விரிவான வெளிபாட்டை இங்கு சுற்றுலாப் பயணிகள் காண்பார்கள்.

நாகார்ஜுன சாகர் அணைக்கட்டு பௌத்த தத்துவப் பேரறிஞர், ஆசார்யா நாகார்ஜுனரின் பெயரால் அழைக்கப்படும் இந்த அணைக்கட்டு உலகிலேயே மிக உயரமான கல்லணை. பொறி இயலில் ஓர் மகத்தான சாதனை. ஓர் அற்புதமான தோற்றம்.

செயற்கை ஏரியின் நடுவே உள்ள தீவு அருங்காட்சியகத்தில் பௌத்த கலாசாரத்தின் பெருமதிப்புள்ள செல்வம் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கிறது. ஒரு மோட்டார் படகில் ஏறினால் அங்கு போய்ச் சேர்ந்து விடலாம். 1926ல் இங்கு நடத்திய அகழ்வு வேலைகள் ஒரு நகரத்தையே வெளிக் கொண்டு வந்தன. ஒரு பல்கலைக்கழகம், மடாலயங்கள், ஸ்தூபிகள், மத நூல்கள், நாணயங்கள், இன்னும், பலப்பல புதையுண்டிருந்தன. அவ்வாறு கண்டெடுத்த புதையல் அனைத்தும் அருமையாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

நாகார்ஜுன சாகருக்கு சில கிலோ மீட்டர் தள்ளிப் போனால் எழிலார்ந்த எதிபோத்தலா அருவியைப் பார்க்கலாம். இயற்கையின் அற்புதக் காட்சிகளை சுற்றுலாப் பயணிகள் கண்டு களிக்கத்தக்க இடம். முதலைப் பண்ணை சுற்றுலாப் பயணிகளை கவரும் மேலும் ஓர் இடம்.





கிருஷ்ணா நதியின் எதிரோட்டத்தில் விசைபடகில் பயணம் இனியதோர் அனுபவம். நாகார்ஜுன சாகருக்கும் ஸ்ரீ சைலத்திற்கு இடையே 110 கிலோ மீட்டர் நீர் பரப்பில் மோட்டார் படகில் சவாரி செய்வது பரவசமூட்டும் பயணம். சுற்றிலும் பரவியிருக்கும் அடர்ந்த காடுகள் பல்வேறு இன வகைப் பிராணிகளுக்கு நன்கு பாதுகாப்புள்ள சரணாலயமாகும்.

சுற்றுலாப் பயணிகளின் வசதிக்கு விருந்தாளி இல்லங்கள் பல நாகார்ஜுன சாகரில் இருக்கின்றன.

ஆந்திரப் பிரதேசத்தின் நாகார்ஜுன சாகருக்கு வாருங்கள். நினைவில் நிலைத்திடும் ஒரு விடுமுறையை அனுபவித்திடுங்கள்.



ஆந்திரப் பிரதேஷ் டூரிசம்,
1வது ஃப்ளோர், கன் விஹார்,
எம்.ஜே. ரோடு, ஹைதராபாத் 500 001.
டெலிபோன்கள்: 556493, 42835, 77192
70087, 233384, 233385

## உலகின் மிக உயர்ந்த கல்லணைக்கட்டில் பௌத்த வரலாற்றை கண்டிடுவீர்



Akshara H/362/APT

# ஆறாம் அத்தியாயம்

# நடுநிசிக் கூட்டம்

குரவைக் கூத்துக்கும் வெறியாட்டுக்கும் பின்னர், வந்திருந்த விருந்தினருக்குப் பெருந்தர விருந்து நடைபெற்றது. வல்லவரையனுக்கு விருந்து ருசிக்கவில்லை. அவன் உடம்பு களைத்திருந்தது; உள்ளம் கலங்கியிருந்தது. ஆயினும் அவன் பக்கத்திலிருந்த அவனுடைய நண்பன் கந்தமாறன் அங்கிருந்த மற்ற விருந்தாளிகள் யார் யார் என்பதைப் பெருமிதத்துடன் எடுத்துக் கூறினான்.

பழுவேட்டரையரையும், சம்புவரையரையுந் தவிர, அங்கே மழபாடித் தென்னவன் மழவரையர் வந்திருந்தார்; குன்றத்தூர்ப் பெருநிலக் கிழார் வந்திருந்தார். மும்முடிப் பல்லவரையர் வந்திருந்தார். மற்றும் தானதொங்கிக் கலிங்கராயர், வணங்காமுடி முனையரையர், தேவ சேநாபதிப் பூவரையர், அஞ்சாத சிங்க முத்தரையர், இரட்டைக் குடை ராஜாளியார், கொல்லி மலைப் பெருநில வேளார் முதலியோரை இன்னின்னார் என்று கந்தமாறன் தன் நண்பனுடைய காதோடு சொல்லிப் பிறர் அறியாதபடி சுட்டிக் காட்டித் தெரியப்படுத்தினான்.

இந்தப் பிரமுகர்கள் சாமான்யப்பட்டவர்கள் அல்ல; எளிதாக ஒருங்கு சேர்த்துக் காணக் கூடியவர்களுமல்ல. அநேகமாக ஒவ்வொருவரும் குறுநில மன்னர்கள்; அல்லது குறுநில மன்னருக்குரிய மரியாதையைத் தங்கள் வீரச் செயல்களினால் அடைந்தவர்கள். ராஜா அல்லது அரசர் என்பது மருவி அக்காலத்தில் அரையர் என்று வழங்கி வந்தது. சிற்றரசர்களுக்கும், சிற்றரசர்களுக்குச் சமமான சிறப்பு வாய்ந்தவர்களுக்கும் அரையர் என்ற பட்டப் பெயர் சேர்த்து வழங்கப்பட்டது. அவரவர்களுடைய ஊரை மட்டும் கூறி அரையர் என்று சேர்த்துச் சொல்லும் மரபும் இருந்தது.

அந்த நாளில் சிற்றரசர்கள் என்றால், பிறப்பினால் மட்டும் 'அரசர்' பட்டம் பெற்று அரண்மனைச் சுக போகங்களில் திளைத்து வாழ்ந்திருப்பவர்கள் அல்ல. போர்க்களத்தில் முன்னணியில் நின்று போரிடச் சித்தமாயுள்ள வீராதிவீரர்கள்தான் தங்கள் அரசுரிமையை நீடித்துக் காப்பாற்றிக் கொள்ள முடியும். எனவே, ஒவ்வொருவரும் பற்பல போர்க்களங்களில் போரிட்டுப் புகழுடன் காயங்களையும் அடைந்தவர்களாகவே இருப்பார்கள். இன்று அத்தனை பேரும் பழையாறைச் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் ஆட்சிக் கடங்கித் தத்தம் எல்லைக்குள் அதிகாரம் செலுத்தி வந்தார்கள். சிலர் சோழப் பேரரசில் பெருந்தரத்து அரசாங்க அதிகாரிகளாகவும் பதவி வகித்து வந்தார்கள்.

இவ்வளவு முக்கியமான சோழ சாம்ராஜ்யப் பிரமுகர்கள் எல்லாரையும் ஓரிடத்தில் பார்த்தது பற்றி வல்லவரையன் நியாயமாக உவகை கொண்டிருக்க வேண்டும். ஆயினும் அவனுடைய உள்ளத்தில் உவகை ஏற்படவில்லை. "இவ்வளவு பேரும் எதற்காக இங்கே கூடியிருக்கிறார்கள்!" என்ற எண்ணம் அவனுக்கு அடிக்கடி தோன்றியது. ஏதேதோ தெளிவில்லாத ஐயங்கள் அவன் உள்ளத்தில் தோன்றி அலைத்தன.

மனத்தில் இத்தகைய குழப்பத்துடனேயே வல்லவரையன் தனக்கென்று கந்தமாறன் சித்தப்படுத்திக் கொடுத்திருந்த தனி இடத்தில் படுக்கச் சென்றான். விருந்தினர் பலர் வந்திருந்தபடியால், வல்லவரையனுக்கு அம்மாபெரும் மாளிகையின் மேல் மாடத்தில் ஒரு மூலையிலிருந்த திறந்த மண்டபமே படுப்பதற்குக் கிடைத்தது. "நீ மிகவும் களைத்திருக்கிறாய்; ஆகையினால் நிம்மதியாகப் படுத்துத் தூங்கு. மற்ற விருந்தாளிகளைக் கவனித்து விட்டு நான் உன் பக்கமே வந்து




படுத்துக் கொள்கிறேன்'' என்று கந்தமாறன் சொல்லிவிட்டுப் போனான்.

படுத்தவுடனே வந்தியத்தேவனுடைய கண்களைச் சுழற்றிக் கொண்டு வந்தது. மிக விரைவில் நித்திராதேவி அவனை ஆட்கொண்டாள். ஆனாலும் என்ன பயன்? மனம் என்பது ஒன்று இருக்கிறதே, அதை நித்திரா தேவியினால்கூடக் கட்டுக்குள் வைக்க முடிவதில்லை. உடல் அசைவற்றுக் கிடந்தாலும், கண்கள் மூடியிருந்தாலும், மனத்தின் ஆழத்தில் பதிந்து கிடக்கும் எண்ணங்கள் கனவாகப் பரிணமிக்கின்றன. பொருளில்லாத, அறிவுக்குப் பொருத்தமில்லாத, பற்பல நிகழ்ச்சிகளும் அநுபவங்களும் அந்தக் கனவு லோகத்தில் ஏற்படுகின்றன.

எங்கேயோ வெகு தூரத்திலிருந்து ஒரு நரி ஊளையிடும்சத்தம்கேட்டது. ஒரு நரி, பத்து நரியாகி, நூறு நரியாகி ஏகமாக ஊளையிட்டன! ஊளையிட்டுக் கொண்டே வந்தியத்தேவனை நெருங்கி, நெருங்கி, நெருங்கி வந்தன. காரிருளில் அந்த நரிகளின் கண்கள் சிறிய சிறிய நெருப்புத் தணல்களைப் போல் ஜொலித்துக் கொண்டு அவனை அணுகிவந்தன.

மறுபக்கம் திரும்பி ஓடித் தப்பிக்கலாம் என்று வந்தியத் தேவன் பார்த்தான். அவன் பார்த்த மறு திசையில் பத்து, நூறு, ஆயிரம் நாய்கள் ஒரே மந்தையாகக் குரைத்துக் கொண்டு பாய்ந்து ஓடி வந்தன. அந்த வேட்டை நாய்களின் கண்கள் அனல் பொறிகளைப் போல் ஜொலித்தன.

நரிகளுக்கும் நாய்களுக்கும் நடுவில் அகப்பட்டுக் கொண்டால் தன்னுடைய கதி என்னவாகும் என்று எண்ணி வந்தியத் தேவன் நடுநடுங்கினான். நல்லவேளை, எதிரே ஒரு கோயில் தெரிந்தது. ஓட்டமாக ஓடித் திறந்திருந்த கோயிலுக்குள் புகுந்து வாசற் கதவையும் தாளிட்டான். திரும்பிப் பார்த்தால், அது காளி கோயில் என்பது தெரிந்தது. அகோரமாக வாயைத் திறந்து கொண்டிருந்த காளி மாதாவின் சிலைக்குப் பின்னுலிருந்து பூசாரி ஒருவன் வெளிக் கிளம்பி வந்தான். அவன் கையில் ஒரு பயங்கரமான வெட்டரிவாள் இருந்தது. ''வந்தாயா? வா!'' என்று சொல்லிக் கொண்டு, பூசாரி அருகில் நெருங்கி, நெருங்கி, நெருங்கி வந்தான்.

''நீ பிறந்த அரச குலத்தின் வரலாறு என்ன? எத்தனை ஆண்டுகளாக உன்



குலத்தினர் அரசு புரிகின்றனர்? உண்மையைச் சொல்!'' என்று பூசாரி கேட்டான்.

''வாணர் குலத்து வல்லவரையர் முந்நூறு ஆண்டு அரசு புரிந்தவர்; என் தந்தையின் காலத்தில் வைதும்பராயர்களால் அரசை இழந்தோம்'' என்றான் வந்தியத் தேவன்.

''அப்படியானால் நீ தகுந்த பலி அல்ல! ஓடிப் போ!'' என்றான் பூசாரி.

திடீரென்று காளி மாதாவின் இடத்தில் கண்ணன் காட்சி அளித்தான். கண்ணன் சந்நிதியில் இரண்டு பெண்கள் கையில் பூமாலையுடன் ஆண்டாள் பாசுரம் பாடிக் கொண்டு வந்து நடனம் ஆடினார்கள். இதை வல்லவரையன் பார்த்துப் பரவசமடைந்திருக்கையில், அவனுக்குப் பின்புறத்தில், ''கண்டோம், கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்'' என்ற பாடலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். பாடியவன் ஆழ்வார்க்கடியான் நம்பிதான். இல்லை, ஆழ்வார்க்கடியானுடைய தலை பாடியது! அந்தத் தலை மட்டும் பலி பீடத்தில் வைக்கப்பட்டிருந்தது!

இந்தக் காட்சியைப் பார்க்கச் சகிக்காமல் வல்லவரையன் திரும்பினான். தூணில் முட்டிக் கொண்டான். கனவு கலைந்தது. கண்கள் திறந்தன. ஆனால் கனவையும் நனவையும் ஒன்றாகப் பிணைத்த ஒரு காட்சியை அவன் காண நேர்ந்தது.

அவன் படுத்திருந்த இடத்துக்கு நேர் எதிர்ப்புறத்தில் கடம்பூர் மாளிகைச் சுற்று மதிளின் மேலே ஒரு தலை தெரிந்தது. அது, அந்த ஆழ்வார்க்கடியான் நம்பியின் தலைதான். இந்தத் தடவை அது கனவல்ல, வெறும் பிரமையும் அல்லவென்பது நிச்சயம். ஏனெனில் எத்தனை நேரம் பார்த்தாலும் அந்தத் தலை அங்கேயே இருந்தது. அது வெறுந் தலை மட்டுமல்ல. தலைக்குப் பின்னாலே உடம்பு இருக்கிறது என்பதையும் எளிதில் ஊகிக்கக் கூடியதாயிருந்தது. ஏனெனில், ஆழ்வார்க்கடியானுடைய கைகள் அந்த மதிள் ஓரத்தின் விளிம்பைப் பிடித்துக் கொண்டிருந்தன. அதோடு, அவன் வெகு கவனமாக மதிளுக்குக் கீழே உட்புறத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். அவன் அவ்வளவு கவனமாக அங்கே என்னத்தைப் பார்க்கிறான்....! இதில் ஏதோ வஞ்சகச் சூழ்ச்சி இருக்கவே வேண்டும். ஆழ்வார்க்கடியான் நல்ல நோக்கத்துடன் அங்கு வந்திருக்க முடியாது. ஏதோ துஷ்ட நோக்கத்துடன் தீய செயல் புரிவதற்கே வந்திருக்கிறான். அவன் அவ்விதம் தீச்செயல் புரியாமல் தடுப்பது கந்தமாறனின் உயிர் நண்பனுகிய தன் கடமையல்லவா? தனக்கு அன்புடன் ஒருவேளை அன்னம் அளித்தவர்களின் வீட்டுக்கு நேரக் கூடிய தீங்கைத் தடுக்காமல் தான் சும்மா படுத்துக் கொண்டிருப்பதா?

வல்லவரையன் துள்ளி எழுந்தான். பக்கத்தில் கழற்றி வைத்திருந்த உறையுடன் சேர்ந்த கத்தியை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டான். ஆழ்வார்க்கடியான் தலை காணப்பட்ட திக்கை நோக்கி நடந்தான்.

மாளிகை மேல் மாடத்தில் ஒருமூலையிலிருந்த மண்டபத்தில் அல்லவா வல்லவரையன் படுத்திருந்தான். அங்கிருந்து புறப்பட்டு மதிள் சுவரை நோக்கி நடந்தபோது, மேல் மாடத்தை அலங்கரித்த மண்டபச் சிகரங்கள், மேடைகள், விமான ஸ்தூபிகள், தூண்கள் ஆகியவற்றைக் கடந்தும், தாண்டியும் சுற்றி வளைத்தும் நடக்க வேண்டியதாயிருந்தது. சற்று தூரம் அவ்விதம் நடந்த பிறகு, திடீரென்று எங்கிருந்தோ பேச்சுக் குரல் வந்ததைக் கேட்டு வல்லவரையன் தயங்கி நின்றான். அங்கிருந்த ஒரு தூணைப் பிடித்துக் கொண்டு, தூணின் மறைவில் நின்றபடி எட்டிப் பார்த்தான். கீழே, குறுகலான முற்றம் ஒன்றில், மூன்று பக்கமும் நெடுஞ்சுவர்கள் சூழ்ந்திருந்த இடத்தில் பத்துப் பன்னிரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். பாதிமதியின் வெளிச்சத்தை நெடுஞ் சுவர்கள் மறைத்தன. ஆனால் ஒரு சுவரில் பதித்திருந்த இரும்பு அகல் விளக்கில் எரிந்த தீபம் கொஞ்சம் வெளிச்சம் தந்தது. அங்கிருந்தவர்கள் அத்தனை பேரும் அன்று இரவு விருந்தின்போது அவன் பார்த்த பிரமுகர்கள்தான்; சிற்றரசர்களும் சோழ சாம்ராஜ்ய அதிகாரிகளுந்தான். அவர்கள் ஏதோ மிக முக்கியமான விஷயத்தைப் பற்றிக் கலந்

தாலோசிக்கவே நள்ளிரவு நேரத்தில் அங்கே கூடியிருக்க வேண்டும். அவர்கள் என்ன செய்கிறார்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைத்தான் ஆழ்வார்க்கடியான் மதிள் சுவர் மீதிலிருந்து அவ்வளவு கூர்மையாகக் கவனித்துக் கொண்டு வருகிறான். ஆழ்வார்க்கடியான் மிகப் பொல்லாத கெட்டிக்காரன் என்பதில் ஐயமில்லை. அவன் இருக்குமிடத்திலிருந்து கீழே கூடிப் பேசுகிறவர்களை ஒருவாறு பார்க்க முடியும்; அவர்களுடைய பேச்சை நன்றாய்க் கேட்க முடியும். ஆனால் கீழேயுள்ளவர்கள் ஆழ்வார்க்கடியானைப் பார்க்க முடியாது. அந்த இடத்தில் மாளிகைச் சுவர்களும் மதிள் சுவர்களும் அவ்வாறு அமைந்திருந்தன. அத்தகைய இடத்தை ஆழ்வார்க்கடியான் எப்படியோ கண்டு பிடித்துக் கொண்டு வந்திருக்கிறான்! கெட்டிக்காரன்தான்; சந்தேகமில்லை. ஆனால் அவனுடைய கெட்டிக்காரத்தனமெல்லாம் இந்த வாணர்குலத்து வந்தியத்தேவனிடம் பலிக்காது! அந்த வேஷதாரி வைஷ்ணவனைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வந்து.... ஆனால் அப்படி அவனைப் பிடிப்பதாயிருந்தால், கீழே கூடியுள்ளவர்களுடைய கவனத்தைக் கவராமல் அவன் உள்ள மதிள் சுவரைத் தான் அணுக முடியாது. அப்படி அவர்கள் பார்க்கும்படி,தான் நடந்து போவதில் ஏதேனும் அபாயம் இருக்கலாம். "இன்றைக்கு நாள் பார்த்து இவன் இங்கே வந்திருக்க வேண்டியதில்லை!" என்று சம்பு வரையர் கூறியது அவன் நினைவுக்கு வந்தது. இவர்கள் எல்லாரும் ஏதோ முக்கிய காரியமாகக் கலந்தாலோசிப்பதற்காக இங்கே வந்திருக்கிறார்கள். அவர்களுடைய யோசனையைப் பற்றிப் பிறர் அறிந்து கொள்வதில் அவர்களுக்கு விருப்பமில்லையென்பது தெளிவு. அப்படியிருக்கும் போது, தன்னைத் திடீரென்று அவர்கள் பார்த்தால், தன்பேரில் சந்தேகப்பட்டுவிடலாம் அல்லவா? ஆழ்வார்க்கடியானைப்பற்றி அவர்களுக்கு தான் சொல்வதற்குள், அவன் மதிள் சுவரிலிருந்து வெளிப்புறம் குதித்து ஓடி விடுவான். ஆகையால், தன் பேரில் சந்தேகம் ஏற்படுவதுதான் மிச்ச



மாகும். "படுத்திருந்தவன் இங்கு எதற்காக வந்தாய்?" என்றால் என்ன விடை சொல்வது? கந்தமாறனின் நிலைமையைச் சங்கடத்துக்கு உள்ளாக்குவதாகவே முடியும். ஆகா! அதோ கந்தமாறன் இந்தக் கூட்டத்தின் ஒரு பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறான். அவனும் இந்தக் கூட்டத்தாரின் ஆலோசனையில் கலந்து கொண்டிருக்கிறான் போலும்! காலையில் கந்த மாறனைக் கேட்டால், எல்லாம் தெரிந்து விடுகிறது.

அச்சமயம் அக்கூட்டத்தாருக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த மூடு பல்லக்கு வந்தியத் தேவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. ஆ! இந்தப் பல்லக்கு பழுவேட்டரையருடன் அவருடைய யானையைத் தொடர்ந்து வந்த பல்லக்கு அல்லவா? அதற்குள்ளேயிருந்த பெண், ஒருகணம் திரையை நீக்கி, வெளியே பார்த்த பெண், இப்போது இந்த மாளிகையில் எந்தப் பகுதியில் இருக்கிறாளோ? அந்தப்புரத்துக்குக்கூட அவளை இந்தக் கிழவர் அனுப்பவில்லையாமே? கொஞ்சம் வயதானவர்கள் இளம் பெண்களை மணந்து கொண்டாலே இந்தச் சங்கடந்தான். சந்தேகம் அவர்கள் பிராணனை வாங்குகிறது. ஒரு நிமிஷம்கூடத் தங்களுடைய இளம் மனைவியை விட்டுப் பிரிந்திருக்க அவர்களுக்கு மனம் வருவதில்லை. ஒருவேளை, இப்போது

கூட இந்தப் பல்லக்கிலேயே பழுவேட்டரையருடைய இளம் மனைவி இருக்கிறாளோ, என்னமோ? ஆகா! இந்த வீராதி வீரரின் தலைவிதியைப் பார்! இந்த வயதில் ஒரு இளம் பெண்ணிடம் அகப்பட்டுக் கொண்டு அவளுக்கு அடிமையாகித் தவிக்கிறார்! அப்படியொன்றும் அவள் ரதியோ, மேனகை,ரம்பையோ இல்லை! வந்தியத்தேவன் ஒருகணம் அவளைப் பார்த்த போது ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சியை அவன் மறக்கவில்லை. அத்தகையவளிடம் இந்த வீரப் பழுவேட்டரையருக்கு என்ன மோகமோ தெரியவில்லை. அதைவிட அதிசயமானது ஆழ்வார்க்கடியானது பைத்தியம். இந்தப் பல்லக்கு இங்கே வைத்திருப்பதினாலேதான் அவனும் சுவர் மேல் காத்திருக்கிறான் போலும்! ஆனால் அவனுக்கும் அவளுக்கும் என்ன உறவோ என்னமோ, நமக்கு என்ன தெரியும்? அவள் ஒருவேளை அவனுடைய சகோதரியாயிருக்கலாம். அல்லது காதலியாகவும் இருக்கலாம். பழுவேட்டரையர் பலவந்தமாக அவளைக்கவர்ந்துகொண்டுபோயிருக்கலாம்! அவ்வாறு அவர் செய்யக் கூடியவர்தான். அதனால் அவளைப் பார்த்துப் பேச ஒரு சந்தர்ப்பத்தை ஆழ்வார்க்கடியான் எதிர்பார்த்து இப்படியெல்லாம் அலைகிறான் போலும்! இதைப் பற்றி நமக்கு என்ன வந்தது? பேசாமல் போய்ப் படுத்துத் தூங்கலாம்.

இப்படி அந்த இளைஞன் முடிவு செய்த சமயத்தில் கீழே நடந்த பேச்சில் தன்னுடைய பெயர் அடிபடுவதைக் கேட்டான். உடனே சற்றுக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினான்.

"உம்முடைய குமாரனுடைய சிநேகிதன் என்று ஒரு பிள்ளை வந்திருந்தானே? அவன் எங்கே படுத்திருக்கிறான்? நம்முடைய பேச்சு எதுவும் அவனுடைய காதில் விழுந்து விடக் கூடாது. அவன் வட திசை மாதண்ட நாயகரின் கீழ்ப் பணி செய்யும் ஆள் என்பது நினைவிருக்க வேண்டும். நம்முடைய திட்டம் உறுதிப்பட்டு நிறைவேறும் காலம் வருவதற்குள் வேறு யாருக்கும் இதைப் பற்றித் தெரியக் கூடாது. அந்தப் பிள்ளைக்கு ஏதாவது கொஞ்சம் தகவல் தெரிந்துவிட்டது என்ற சந்தேகமிருந்தால் கூட அவனை இந்தக் கோட்டையிலிருந்து வெளியே அனுப்பக் கூடாது. ஒரேயடியாக அவனை வேலை தீர்த்துவிடுவது உசிதமாயிருக்கும்..."

இதைக்கேட்ட வந்தியத்தேவனுக்கு எப்படி இருந்திருக்குமென்று நேயர்களே ஊகித்துக் கொள்ளலாம். ஆனாலும் அந்த இடத்தைவிட்டு அவன் நகரவில்லை. அவர்களுடைய பேச்சை முழுதும் கேட்டே விடுவது என்று உறுதி செய்து கொண்டான். வடதிசை மாதண்ட நாயகர் யார்? சுந்தர சோழ சக்ரவர்த்தியின் மூத்தகுமாரர். அடுத்தபடி சோழ சிம்மாசனம் ஏற வேண்டிய பட்டத்து இளவரசர். அவரிடம் தான் வேலை பார்ப்பதில் இவர்களுக்கு என்ன ஆட்சேபம்? அவருக்குத் தெரியக் கூடாத விஷயம் இவர்கள் என்ன பேசப் போகிறார்கள்?

அச்சமயம் கந்தமாறன் தன் சிநேகிதனுக்குப் பரிந்து பேசியது வல்லவரையனின் காதில் விழுந்தது.

"மேல்மாடத்து மூலை மண்டபத்தில் வந்தியத் தேவன் படுத்து நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறான். இந்தக் கூட்டத்தின் பேச்சு அவன் காதில் விழப் போவதில்லை. தனக்குச் சம்பந்தமில்லாத காரியத்தில் அவன் தலையிடுகிறவனும் அல்ல. அப்படியே அவன் ஏதாவது தெரிந்து கொண்டாலும், அதனால் உங்கள் யோசனைக்குப் பாதகம் ஒன்றும் நேராது. அதற்கு நான் பொறுப்பு!" என்றான் கந்த மாறன்.

"உனக்கு அவனிடம் அவ்வளவு நம்பிக்கை இருப்பது குறித்து எனக்கும் மகிழ்ச்சிதான். ஆனால் எங்களில் யாருக்கும் அவனை முன்பின் தெரியாது. ஆகையினால்தான் எச்சரிக்கை செய்தேன். நாம் இப்போது பேசப் போகிறதோ, ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் உரிமை பற்றிய விஷயம். அஜாக்கிரதை காரணமாக ஒரு வார்த்தை வெளியில் போனாலும் அதனால் பயங்கரமான விபரீதங்கள் ஏற்படலாம். இது உங்கள் எல்லாருக்குமே நினைவிருக்க வேண்டும்!" என்றார் பழுவேட்டரையர்.

(தொடரும்)

# விடியல் கூட விலகிப் போய்விடுகிறது

**புதுக்கவிதைப் போட்டி — 5**

கடந்த 7.12.86 இதழில் வெளியான 'காத்திருக்கிறார்கள்' கதைக்குப் பொருத்தமாக எழுதப்பட்ட கவிதைகள்:

## முதல் பரிசுக் கவிதை:

அநியாய வல்லூறுகளைப்
பொசுக்க வேண்டிய
தோட்டாக்கள்
அப்பாவிக் கொக்குகளைப்
பதம் பார்ப்பதேன்?
வெளிச்சத்துக்கு வழி கூறாமல்
இவர்கள் இருட்டுக்குத்
தாலாட்டுப் பாடுவதால்
விடியல்கூட
விலகிப் போய்விடுகிறது.

— ப. அப்துல் ராசிக்,
பி.எஸ்ஸி வேதியியல் (இரண்டாமாண்டு),
தெ.தி. இந்துக் கல்லூரி,
நாகர் கோவில், குமரி மாவட்டம்.

## இரண்டாம் பரிசுக் கவிதை:

இவர்கள்
குற்றவாளிகளை
அடையாளம் காட்டாமல்
சத்தியத்திற்கு அல்லவா
சமாதி கட்டுகிறார்கள்!
சட்டம்,
அதிகாரத்தைக் கண்டவுடன்
நிறம் மாறிப் போகிறதா?
இவர்கள் காத்திருப்பது
குற்றவாளிகளுக்கு அல்ல
உயர்
அதிகாரத்திற்கு
மரியாதை செய்ய!

— இ. கோவிந்தராசு,
II BGL.,
டாக்டர் அம்பேத்கார் அரசு சட்டக் கல்லூரி,
புதுச்சேரி–1.

---

இரவுக்காக நிலவும்
இலவுக்காகக் கிளியும்
காத்திருத்தல் நியதியென்று
கவிஞன் சொன்ன பொய்!
இங்கே இளிச்சவாயர்களுக்காக
ஏய்ப்பவர் காத்திருப்பதே வாடிக்கை!
இது —
இயற்கை நியதி அல்ல
இரைப்பையின் நியதி!

— A. உமாபதி,
எம்.எஸ்ஸி (கணிதம்), இரண்டாமாண்டு,
அரசினர் ஆண்கள் கலைக் கல்லூரி,
சேலம்–636 007



---

காத்திருக்கிறார்கள் —
காக்கி உடையில் மட்டுமல்ல
எண்ணம் எடுத்துரைக்காத
வண்ணங்கள் பலவாய்க்
காத்திருக்கிறார்கள் —
சிக்கும் எலிகளுக்குச்
சமாதிப் பொறியாய்
மட்டுமல்ல — தாங்கள்
இடறியபின் சீறும்
புலிகளுக்குச்
சாமரம் வீசவும்
சளைக்காத கைகளுடன்
காத்திருக்கிறார்கள்!

— 'கவியார்வன்' (சி. மணிவண்ணன்),
சி. கந்தசாமி நாயுடு ஆண்கள் கல்லூரி,
அண்ணாநகர், சென்னை–600 102.




# அது ஒரு தொடர் கதை...

**அ**தன் சட்டதிட்டங்கள், ஒழுங்கு முறைகள், வேலை நேரங்கள் என்று எல்லாமே சுமார் இருபத்தேழு பிரிவுகள் கொண்ட நிலையான ஆணை என்று தமிழிலும், ஸ்டாண்டிங் ஆர்டர் என்று ஆங்கிலத்திலுமாக அச்சடிக்கப்பட்டவைதான்.

யார் மீதாவது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால் நிலையான ஆணையின் கீழ் நடத்தை நெறி என்கிற உட்பிரிவில் வரும். ஒரு பிரிவின் அடிப்படையில் நடவடிக்கை எடுக்க, சம்பந்தப்பட்ட அதிகாரிக்குப் பூரண அதிகாரமளிக்கிறது அது.

குறிப்பாகப் பத்தொன்பதாவது ஷரத்தில் உட்பிரிவு எட்டு அலுவலகத்திற்குள் மது பானம் அருந்தி வருவதை ஒழுங்கீனமாகச் சொல்கிறது.

இது சீனிக்குத் தெரியும். அவன் ஒரு பட்டதாரி. நேர்முகத் தேர்வின் மூலம் அந்த அரசுத் துறை அலுவலகத்தில் பணிக்குச் சேர்ந்தான்.

ஓர் அரசாங்க உத்தியோகம் என்கிற தகுதி. கல்யாணச் சந்தையில் அவன் மதிப்பு உயர்ந்தபோது, பணக்கார இடத்திலிருந்து பெண் வந்தது. அப்பொழுதே சீனியைப் பற்றி ஒரு குறைபாடு பேசப்பட்டது.

'தண்ணி போடுவான்னு பேசிக்கறாங்க. மத்தபடி பையன் நல்லாத்தான் இருக்கான்' — என்றபோது,

'இன்னைக்கு ஆருதான் குடிக்கறதில்லை? எல்லாருந்தா குடிக்கறாங்க.... என் பாட்டன் குடிச்சான். எங்கப்பன் குடிகாரன்.... அத்த வுடு. எல்லாம் சரியாப் போய்டும். நாகூடத்தான்....'

குடி ஒரு பெரிய சமூகக் குற்றமல்ல என்று நினைக்கிற சமூகக் கட்டமைப்புக்குள் வாலிபனான சீனியின் குடிப்பழக்கம் என்கிற குற்றம் மன்னிக்கப்பட்டு, பெண் கொடுக்கப்பட்டு விட்டது.

**கா**லை பத்தரை மணி. விடுப்பில் சென்றவர்கள் போக மற்ற அனைத்து ஊழியர்களும் தங்கள் ஆசனத்தில் இருந்தனர்.

வருகைப் பதிவேடு தலைமை அதிகாரியின் அறைக்குப் போக வேண்டிய நேரம்.

சீனியைக் காணவில்லை. அவன் இன்னும் வரவில்லை. அவன் வராததற்கான காரணம் தெரியவில்லை.

மணி பதினொன்றாகிவிட்டது. பன்னிரெண்டு மணி சுமாருக்கு, அந்தச் சிறிய அறை முழுவதும் ஏதோ ஓர் அழுகிப் போன பழத்தின் நெடி சூழத் தள்ளாடிக் கொண்டே, கண்கள் சிவக்க, நாக்கினால் உதட்டை அடிக்கடி ஈரப்படுத்திக் கொண்டு சீனி உள்ளே நுழைந்தான்.

மேஜை மேஜையாக வருகைப் பதிவேட்டைத் தேடினான். யாரும் அவனிடம் ஒன்றும் பேசவில்லை.

பேனாவைத் திருப்பிப் பிடித்துக் கொண்டு தலைமை அதிகாரியின் அறைக்குள் நுழைந்தான்.

''இப்பத்தான் வரீரா?''

''ஆமாம் சார்.''

''மணி என்ன ஆவுது பார்த்தீரா?''

''பன்னண்டாவப் போவுது.''

''பத்தரை மணி ஆபீசுக்கு பன்னிரண்டு மணிக்கு வரீரே! இந்த அலுவலகத்தில் நீர் ஒரு தேர்வு நிலை உதவியாளர் வேறே. ஒங்களுக்கெல்லாம்....'' அவர் மேலும் ஏதோ சொல்ல வந்தார்; நிறுத்திக் கொண்டுவிட்டார்.

காரணம், அந்தக் குடிகார உதவியாளருக்கு அந்த அலுவலகத்தில் அதிகச் செல்வாக்கு உண்டு. பல்வேறு காரணங்களினாலும், பல்வேறு சூழ்நிலைகளினாலும் அங்கே ஓர் ஒற்றுமையுணர்வு நிலவியது; தவறை, தவறு என்று எடுத்துச் சொல்லப் பயப்படும் சூழ்நிலை, ரொம்ப நாட்களாகவே நிலவுகிறது.

'உனக்கெல்லாம் போய் இந்த மாதிரி பொறுப்புள்ள உத்தியோகத்தைக் கொடுக்கிறவன்களைச் சொல்லணும்...' என்று சொல்ல வந்தவர்தான் பாதியில் நிறுத்திவிட்டார். ஏற்கெனவே ஒருமுறை இப்படிச் சொல்லப் போய் அதையே ஒரு பெரிய விஷயமாக அலுவலகம் முழுவதும் பரப்பி அவரைச் சங்கடப்படுத்திய நிகழ்ச்சி நினைவுக்கு வந்துவிட்டது.

''சீனி நீர் செய்யறது நல்லாவே இல்லைய்யா! கிட்டத்தட்ட ஆயிரத்து இரு நூறு ரூபா சம்பளம் வாங்கறீர். ஒரு தேர்வு நிலை உதவியாளர் வேறே. தினம் இப்படிக் குடிச்சுப்புட்டு பதினொரு மணிக்கும், பன்னிரண்டு மணிக்கும் வரீர். கேட்டா ஏதேனும் நொண்டிச் சமாதானம் பேசறீர். நீராவும் இருந்த மாட்டீர், மத்தவங்க சொன்னாலும் கேட்க மாட்டீர். ஒம்மப் பத்தி ஒரு வரி எழுதினாப் போறும். பெரிய அதிகாரி உம் மேலே கடுமையான நடவடிக்கை எடுத்துடு

வாரு. என் கையால அதைச் செய்ய வேணும்னு பார்க்கறேன். அதோட அந்தப் பொண்ணைப் பார்த்தாக் கஷ்டமா இருக்குது. ஒம்ம நம்பி ஒம்ம கட்டிக்கிட்ட அந்தப் பொண்ணை நினைக்கறபோது.... போம்... வேலையைப் பாரும். நிக்கக் கூட முடியாம அப்படிப் போட்டுட்டு வந்திருக்கீர். தலை நிக்க மாட்டேங்குது....''

கணக்கு அதிகாரி சிவசுப்ரமணியம் கண்ணாடிக்குள் இருக்கும் சின்ன விழி மேட்டில்புருவத்தைப்பலமுறைஏற்றி இறக்கி விட்டுக் கொண்டார்.

சில சமயம் அவனுடைய அப்பாவித் தனத்தின் பேரிலும், பல சமயம் அவனை நம்பிக்கழுத்தைநீட்டிவிட்ட அப்பெண்ணின் பேரிலும் ஏற்படும் இரக்க உணர்வு காரணமாகவே அவன் அவ்வப்பொழுது மன்னிக்கப்பட்டான்.

**மீ**ண்டும் ஒரு வாரமாக சீனி அலுவலகம் வரவில்லை. அவனிடமிருந்து விடுப்புக்கான விண்ணப்பமும் இல்லை.

ஒரு வாரம் சென்றபின் கையில் ஒரு லீவு லெட்டருடன் உள்ளே நுழைந்தவனைப் பார்த்து எரிச்சலடைந்தார் அதிகாரி சிவசுப்ரமணியம்.

அவரிடம், தான் ஒரு வாரம் வராததற்கான லீவு லெட்டரை நீட்டினான்.

'திடீரென்று உடல்நலம் சரியில்லாமல் போய்விட்டதால் எனக்கு ஏழு நாட்கள் சட்டியவிடுப்பு அளிக்குமாறுகேட்டுக்கொள்கிறேன்...' என்று பின் தேதியிட்ட கடிதத்தை வாங்கி மேஜைமேல் வைத்துவிட்டு,

''உமக்கெல்லாம் எதுக்கய்யா உத்தியோகம்! ஏதாவது அறிவு இருந்துதான் இப்படிச் செய்யறீரா? போய்யா அப்பாலே...

மகரிஷி

நாத்தம் சகிக்கல....''

''இல்ல சார், நெஜம்மாவே உடம்பு சரியில்லே. ஆஸ்பத்திரியிலே போய்ப் படுத்துக்கிட்டேன்.''

''நீ எங்கே வேணு நாசமாப் போ.... லீவு லெட்டரைக் கொடுத்துட்டுப் போகலாமில்லே!''

''பெரியசாமிகிட்டே சொல்லி அனுப்பினேன் சார்.''

''அவன் ஒரு குடிகாரன். அவனையும் ஒரு வாரமா ஆபீஸ் பக்கமே காணோம். ஒங்க ரெண்டு பேரையும் தொலைச்சுத் தலை முழுகினாத்தான் இந்த ஆபீஸ் உருப்படும்...

சீனி தலையைச் சொறிந்து கொண்டே வெளியே வந்தான்.

**ஊ**ழியர்களுக்கான நடத்தை நெறி, மற்றும் நடத்தைக்கான தண்டனை ஆகியவற்றைக் கவனிக்கும் பிரிவு உதவியாளர் அங்கமுத்துவை உள்ளே அழைத்தார் அதிகாரி.

''இந்தச் சீனி இப்படிக் குடிச்சுப்புட்டு அலுவலக விதிமுறைகளை மீறிக்கிட்டே இருக்காரே, இவர் மேலே ஏதாவது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க முடியுமா? நம்ப நடைமுறை சட்டம் என்ன சொல்லுது? வேலையை விட்டுத் தற்காலிகமா நீக்க முடியுமா?''

''நடத்தை நெறி பத்தொன்பதின்படி இது ஒழுங்கின நடவடிக்கைப் பிரிவிலே வருதுங்க. முதலில் காரணம் கேட்டு 'மெமோ' கொடுக்கணும். அதற்கு, அவர் விளக்கம் திருப்தியளிக்கவில்லை என்றால் மேல் நடவடிக்கையைத் தொடரலாம்.''



''நீர் சொல்லிட்டீர். ஒழுங்கு நடவடிக்கை வந்தா அநியாயமா மாட்டிப்பார். இப்ப நிர்வாகம் இருக்கிற நிலையிலே உடனே சீனியை சஸ்பெண்ட் பண்ணுன்னு தலைமை அலுவலகத்திலிருந்தும் நமக்கு உத்தரவு கிடைச்சுடும்.... பாவம்.... வீணா அவதிப்படுவார்... அதை நினைச்சாத்தான் கஷ்டமா இருக்குது. அதோட நான் இன்னும் ரெண்டு மாசத்திலே ரிடையர் ஆகப் போறேன். போற நேரத்திலே இந்த ஆளைக் கெடுத்தேன் என்கிற கெட்ட பெயரோட போகணுமா? எப்படியோ கெட்டுக் குட்டிச்சுவராப் போவட்டும். அவனைக் கெடுக்கற வேலையை இந்தக் கையிலே நான் செய்ய மாட்டேன்''

சீனி பின் தேதியிட்டுக் கொடுத்த விடுப்புக்கான விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக அதில் கையெழுத்திட்டு அங்கமுத்துவிடம் கொடுத்தார்!

**இ**ரண்டு மாதங்களில் சிவசுப்ரமணியம் ஓய்வு பெற்றுச் சென்றுவிட்டார். அவருக்குப் பதில் புதிதாக மற்றொரு அதிகாரி பொறுப்பேற்றுக் கொண்டார்.

முன்பிருந்த அதிகாரிகளைவிட இவர் சற்றுக் கடுமையாக இருந்தார். அலுவலக விதிமுறைகளைத் தீவிரமாகப் பற்றி நின்றார். வேலை நேரம், ஓய்வு நேரம், ஊழியர்கள் வெளியே செல்லும் நேரம் எல்லா இடத்திலும் அவருடைய கண்காணிப்பு அழுத்தமாக இருந்தது.

எனவே, முன்பிருந்த இலகுத் தன்மை முற்றிலுமாக அகன்று ஒரு ரிஜிடிடி தெரிந்தது.

**வ**ருகைப் பதிவேட்டைக் கையில் வைத்துக் கொண்டு தன் நேர்முக உதவியாளரை அழைத்தார் புதிய அதிகாரி.

''சீனி ஒரு வாரமாக எவ்வித அறிவிப்புமின்றி வேலைக்கு வராமல் இருக்கிறாரே! என்ன நடவடிக்கை எடுக்கப் போறீங்க...?''

ஊழியர்களின் நடத்தை நெறி, வருகைப் பதிவு, மற்றும் விடுப்பில் செல்லும் பகுதிகளைக் கவனிக்கும் உதவியாளர் அங்கமுத்து மௌனமாக நின்றார்.

''நான் வந்த நாளாகக் கவனிக்கிறேன். இவர் இது மாதிரி ரெண்டு மூணு தரம் லீவு லெட்டரோ, முன் அறிவிப்போ இல்லாமல் லீவு எடுத்திருக்கிறார். பிறகு வந்து எழுதிக் கொடுத்துவிட்டு ஏதோ சமாதானம் சொன்னார்.

''அவருக்கு உடனே முன் அறிவிப்பும், விடுப்புக்கான அனுமதியும் இல்லாமல் இருப்பதற்கான காரணம் கேட்டுக் கடிதம் எழுதிக் கொண்டாங்க. மெமோவை இன்னிக்கே பதிவுத் தபாலில் அனுப்பணும். இதை என்ன ஆபீஸ் என்று நினைத்தாரா, இல்லே மளிகைக் கடையென்று நினைத்தாரா?''

சீனியின் பூர்வோத்திரம் பற்றி மெதுவாக விவரித்தார் அங்கமுத்து.

சீனியைப் பற்றி ஓரளவு அவருக்குத் தெரிந்திருந்தது. வேலையில் அப்படி இப்படி என்றால் கூடப் பரவாயில்லை. ஆனால் ஒழுங்கீனங்களை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

''இதற்கு முன்பிருந்தவர்கள் இப்படிப் பட்ட ஒரு நபரை வளர்த்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள். வாங்குகிற சம்பளத்துக்கு மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் வேலை செய்ய வேண்டும். இரக்கப்பட்டு, இரக்கப்பட்டு இப்படியொரு உதவாக்கரைக்கு ஊக்கம் தரவே கூடாது. ஏதேனும் ஓரிடத்தில் இப்படிப்பட்டவர்களின் நடவடிக்கைகளை நிறுத்தியாக வேண்டும். யாரும் சரியான தண்டனை கொடுக்காமல் விட விடத்தான் சீனி போன்றவர்களின் இந்த மாதிரி நடவடிக்கைகளை பிற்பாடு கட்டுப்படுத்த முடியாமலே போய்விடுகிறது...''

புதிய கணக்கு அதிகாரி இதுவரை யாரும் பேசாத அளவு நியாய அநியாயம் பற்றி ஒரு பிரசங்கமே செய்துவிட்டார். அவர் அறைக்கு வெளியே மற்ற ஊழியர்கள் குழுமி நின்று அவர் உள்ளே அங்கமுத்துவிடம் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். மேலும் தொடர்ந்தார் அவர்....

''சரி.... ஒரு ட்ராப்ட் போடுங்க. அவர் இந்த வருஷம் எத்தனை முறை விடுப்பில் போயிருக்கிறார். விடுப்பு அனுமதியில்லாம எத்தனை நாட்கள் சென்றிருக்கிறார் — அன் ஆத்தரைஸ்டு ஆப்ஸன்ட் எத்தனை முறை ஏற்பட்டிருக்கு — இவை அத்தனையும் அடங்குகிற மாதிரி ட்ராப்ட் எழுதி எனக்கு வையுங்க. நான் நாளை என் விருப்ப மாறுதல் விஷயமாகச் சென்னை போகிறேன். வருவதற்கு ஒரு வாரமாகலாம். வந்தவுடனே சீனி யின் அந்தக் கடிதாசை மேலிடத்துக்கு அனுப்பி மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கலாம்.... யாரும் செய்யாவிட்டால் பரவாயில்லை. நான் செய்கிறேன்.''

அங்கமுத்து வெளியே வந்தார். தன் னிடத்திற்கு வந்தவுடனேயே, சீனிக்காக ஏற்கெனவே தயாராகிவிட்ட அவருடைய தனி கோப்பை எடுத்து வைத்துக் கொண்டார்.

விரிவான அறிக்கையொன்று எழுத வாரம்பித்தார்.

சீனி இதோட தீர்ந்தான். இந்த அதிகாரியுடன் அவன் கணக்கு முடிந்துவிடப் போகிறது என்றுதான் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

**செ**ன்னை சென்ற அதிகாரி திரும்பி விட்டார்.

அவனைப் பற்றிய விரிவான 'ட்ராப்ட்' லெட்டர் மேஜை மேலிருந்தது. வந்தவுடன் அதைப் படித்தார். சில இடங்களில் சில சில்லறைத் திருத்தங்கள் செய்து அதைக் கையெழுத்திட்டு டைப்புக்கு அனுப்பி விட்டார்.

அது டைப்பாகி மூன்று நகலுடன் அவர் மேஜைக்கு அன்று மாலையே வந்துவிட்டது.

அங்கமுத்து அதிகாரியின் அறைக்குள் நுழைந்தார்.

அதிகாரி தன் மாறுதல் விஷயமாகச் சென்னை சென்ற செய்திகளை விவரித்து

** நான் என்ற மமதை மிக்க ஆங்கிலச் சொல் I. அதனை அடிப்பது போல் குறுக்குக் கோடு போட்டால் சிலுவைக் குறியாகிவிடும். மமதையை அடித்து விரட்டினால் கடவுள் தன்மையை அடையலாம்.

''போர்க் களத்தில் சண்டை போடும் நமது யானைகள், குதிரைகள், கழுத்தி லெல்லாம் என்னவோ அட்டையில் எழுதித் தொங்கவிட்டிருக்கே, என்ன அது?''

''இதெல்லாம் மதுரை மாறவர்மன் நமது மன்னருக்கு அளித்த நிதி உதவி யில் வாங்கியதாம்!''

— கரடிகுளம் ஜெயபாபாரதிப்ரியா



●● ஓட்டுப் போடாத நல்ல குடிமக்களால் மோசமான அரசியல்வாதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

விட்டு, மேஜை மேல் தன் கையெழுத்திற் காகக் காத்திருக்கும் சீனியைப் பற்றிய கடி தத்திற்கு வந்தார்.

இன்னும் அவர் அதில் கையெழுத்திட வில்லை. இரண்டு முறை கையெழுத்துப் போடப் போனவர் நிறுத்திக் கொண்டார். அவற்றை மடித்து வைத்துவிட்டு, மேலும் அங்கமுத்துவிடம் பேசினார்.

சீனி எவ்வித விடுப்பு விண்ணப்பமும் தராமல் இரண்டு நாட்களாக அலுவலகம் வரவில்லை என்பதைக் கேள்விப்பட்டபோது அவருக்குச் சங்கடமாக இருந்தது.

''நாளைக்குநம்பபழனிச்சாமியை அனுப்பி அவரை அழைத்துக் கொண்டு வரச் சொல் லுங்கள். இதை ரெண்டு நிமிஷத்திலே கையெழுத்துப் போட்டு உடனே டெஸ்பாச் சுக்கு அனுப்பிடலாம். ஆனா அநியாயமா வேலைக்கு ஆபத்து வந்துவிடும். ஓர் ஏழை யின் வாழ்க்கையைக் கெடுக்க மனசு வர மாட்டேங்குது. நாளைக்கு அவரோட, நான் பேசிப் பார்க்கறேன். ஒண்ணும் சரிப்பட்டு வரலேன்னா, நாளைக்கே கையெழுத்துப் போட்டு அனுப்பிடலாம்.''

அங்கமுத்து வெளியே வந்தார். அனேக மாக நாளையுடன் சீனி விவகாரம் முடிவுக்கு வந்துவிடும்.

மேலும் இரண்டு மூன்று நாட்கள் அதே நிலைதான் நீடித்தது. பிறகு, ஒருநாள் ஏதோ முடிவுடனேயே வந்திருந்தார் அதிகாரி.

வந்தவுடனேயே கையெழுத்துப் போட வேண்டிய பேப்பர்களுக்குக் கையெழுத் துப் போட்டார். கூடுமானவரை கோப்பு களைத் துரிதமாக முடித்தார்.

சீனியின் மெமோ அவர் கண்ணில் படுகிற மாதிரி இருந்தது.

அன்றும் சீனி அலுவலகம் வரவேயில்லை. கடிதத்தை எடுத்து அதில் கையெழுத்திட முனைந்தபோது, பழனிச்சாமி அன்றைய தபால்களைக் கொண்டு வந்து மேஜைமேல் வைத்தார்.

அன்றைய தபாலில் அவர் எதிர்பார்த்த அந்தத் தபால் வந்துவிட்டது. அவர் சென்னை சென்று ஏற்பாடு செய்துவிட்டு வந்த தன் விருப்ப மாறுதல் கேட்டிருந்த இடம் கிடைத்து விட்டது.

செய்தி அலுவலகம் பூராவும் பரவிய போது உதவியாளர்கள், மற்றும் கடைநிலை உதவியாளர்கள் ஒவ்வொருவராக வந்து அவரிடம் மகிழ்ச்சி தெரிவித்து விட்டுப் போனார்கள்.

சீனியைப் பற்றிய கடிதம் மேஜை மேல் அப்படியே இருந்தது.

உடனடியாகப் பொறுப்புகளை அவர் அந்தஸ்தில் உள்ள மற்றொருவரிடம் ஒப் படைத்துவிட்டுப் போகும்படி உத்தரவு வந் திருந்ததால் உடனே தம் பணியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தயாராகி விட்டார்.

அன்றிரவே அவர் புறப்பட வேண்டி யிருந்ததால் அவசரமாக ஏற்பாடு செய்யப் பட்ட பிரிவு உபசார விழாவில் எல்லோரிட மும் விடை பெற்றுக் கொண்டிருந்தார்.

''வருஷக் கணக்கில், இங்கே இருந்த அதிகாரிகள் சீனியை இப்படி வளர்த்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். நான் ஆறு மாத காலம் கூட இங்கே இல்லை. நான் இதில் கையெழுத்துப் போட்டு இதை மேலி டத்துக்கு அனுப்பிவிட்டால் அவருடைய எதிர்காலம் முழுமையாக நாசமாகிவிடும்.

''ஓர் ஆறு மாத காலம் உங்கள் எல்லோரு டைய ஒத்துழைப்புடன் என் வேலையை நான் சரியாகச் செய்து முடித்திருக்கிறேன். போகிற இடத்திலெல்லாம் நான் சற்றுக் கடுமையானவன் என்ற பெயர் எடுத்திருக் கிறேன். வாஸ்தவம்தான். ஆனால் யாருடைய வாழ்க்கையையும் பாழடிக்கவில்லை. அம் மாதிரி நடவடிக்கைகளை நான் செய்ய வில்லை.

''அதே மனிதாபிமான அடிப்படையில் தான் இன்றும் இங்கிருந்து உங்கள் எல்லோ ரிடத்திலும் விடை பெற்றுப் போகிறேன். சீனி செய்கிற ஒழுங்கீனங்களைவிட, இவர் வந்தார் அநியாயமாக அவரை வீட்டுக்கு அனுப்பிவிட்டார் என்று நான் போன பின்பு பேசுவார்கள். மாறுதலாகி வேறு இடத்துக் குப் போகும்போது இந்தக் காரியத்தைச் செய்ய எனக்கு இஷ்டமில்லை.''

கையெழுத்துப் போடாத அந்த மெமோவை அங்கமுத்துவிடமே திருப்பிக் கொடுத்தார்.

அவர் எல்லோரிடமும் விடை பெற்று வெளியேறிக் கொண்டிருந்தபோது, சீனி குடித்துவிட்டு உள்ளே நுழைந்து கொண் டிருந்தான்.

இதுநாள்வரை அலுவலகம் வராததற் கான காரணத்திற்கு பின் தேதியிட்ட விடுப்பு விண்ணப்பமொன்று அவன் கையில் இருந் தது!

# எப்படியெல்லாம்

ஐந்நூறு அடி ஆழக் குழாய் போட்டும் தண்ணீர் கிடைக்காத இடங்கள் உண்டு. சில இடங்களில் பத்தடியில் தண்ணீர் கிடைக்கும்; ஆனால் வாயில் வைக்க முடியாது. இன்னும் சில இடங்களில் தண்ணீர் வெகு ஆழத்திலிருக்கும்; மேலே கொண்டு வந்து தேக்கி வைத்து விநியோகிக்க டாங்க் இருக்காது. சில இடங்களில் டாங்க் இருந்தாலும் ஓட்டையாய் இருக்கும்—உபயோகமில்லாமல். பல இடங்களில் தண்ணீரும் இருந்து டாங்கும் சரியாக இருந்தால் மோட்டார் சரியாக இருக்காது: அடிக்கடி ரிப்பேராகும்.

போதும் பொண்ணு



இப்படிப்பட்ட பல நூறு கிராமங்களில் இப்போது நாம் சொல்லப் போவது, வெள்வரை என்னும் கிராமம் பற்றியது. ஆவுடையார் கோயிலிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் உள்ளது இந்தக் கிராமம். ஊரை ஒட்டி தொழுவனூர் ஆறு என்று ஓர் ஆறு. (வெறும் மணற் பரப்பு?) அதில் ஒரு கிணறு வெட்டினார்கள். வற்றாத தண்ணீர் (சுவையோ அமிர்தம்!) அரை கி.மீ. தூரத்தில் ஒரு மேல்நிலைத் தொட்டி கட்டினார்கள். மக்கள் முகத்தில் சந்தோஷத்துளிகள்; மோட்டார் போட்டதும் தண்ணீர் மேல்நிலைத் தொட்டிக்கு வந்து கிராமத்தில் குழாய் மூலம் விநியோகிக்கப்படும் என்ற சந்தோஷம்! அதுபோலவே சில தினங்கள் தண்ணீர் வரத்தான் செய்தது. பிறகு ஒருநாள் திடீரென்று வரவில்லை. என்னவென்று கேட்டபோது, 'மோட்டார் ரிப்பேர்... ரிப்பேர்.... ரிப்பேர்.....?



* சீனிவாசன்.

இப்படிப் பத்து வருடங்கள் ஓடி விட்டன; இன்னும் ரிப்பேர்தான். காரணம், "அது 1.5 குதிரை சக்தி கொண்ட மோட்டார். மேல்நிலைத் தொட்டிக்கும் கிணற்றுக்கும் தூரம் அதிகமாக இருப்பதால் போதிய விசையுடன் அது இயங்க முடியாமல் அடிக்கடி ரிப்பேர். பிறகு நிரந்தரமாகவே ரிப்பேர். ஆக தேவை ஐந்து குதிரை சக்தி கொண்ட மோட்டார். கலெக்டரிலிருந்து கடைநிலை ஊழியர்கள் வரை பார்த்தவர்களிடமெல்லாம் புகார் சொல்லிப் பார்த்தாகிவிட்டது. பேப்பர்தான் வேஸ்ட்!" என்றார் சீனிவாசன்.

தற்சமயம் அங்கே ஊராட்சித் தலைவர் சுலோசனா என்ற பெண்மணி. (பரம்பரை பரம்பரையாக இவர்கள் குடும்பத்திலிருந்துதான் ஊராட்சித்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறாராம்.) சந்தித்துக் கேட்டோம்.

"என்னங்க... பிரச்னையைத் தீர்க்க என்ன செய்யப் போறீங்க?"

"யூனியன்லே சொல்லியிருக்கேங்க. சீக்கிரமா அதிக சக்தி கொண்ட மோட்டார் வாங்கி மூணு ஃபேஸ் கனெக்ஷன் கிடைச்சுடுமுங்க....." என்றார்.

இந்தத் தண்ணீர்ப் பிரச்னையால் சிறுவர் சிறுமியர் அனைவரும் அரசாங்க உணவை மையங்களிலேயே சாப்பிடாமல் வீட்டிற்குக் கொண்டு போய்ச் சாப்பிடும் அவலம். (கொட்டை கொட்டையான அந்தச் சாதம் இன்னும் கண்ணில் நிற்கிறது.)

ஊரிலிருந்துநகர்ந்துஹரிஜனக்காலனிக்கு வந்தோம். முனியம்மா, முத்துலட்சுமி, காளியம்மா, மஞ்சுளா, போதும் பொண்ணு, கருப்பாயி என்று பெண்கள் பலரும் எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"மூடக் கூட முடியாதபடிக்குத் திறந்தபடியா ஒரு குழாய் போட்டாங்க. தண்ணியே வரலேங்க... — இது போதும் பொண்ணு.

"இதப் பாருங்க, இந்தக் காலனிலே இருக்கறது ஒரே விளக்கு. அதுவும் எரியறதில்லே. ரிப்பேர் செய்ய வரும் லைன்மேனுக்குப் பணம் வெட்டினால்தான் செய்வேங்கிறார்..." இது கறுப்பாயி.

"இருந்த ஒரே நகையான தோட்டை அடகு வைச்சு 2000 ரூபாய் கொடுத்தேங்க. பாவிப் பயலுக எப்படிக் கட்டிக் கொடுத்திருக்காங்க... பார்த்தீங்களா?" — காளியம்மா.



° முனியம்மா

# ஏமாற்றுகிறார்கள்..!



அமிர்தமாய்ச் சுவைக்கும் குடிநீர்க் கிணறு.

வீரய்யன்

இந்த காலனி மக்களுக்கு அரசு வீடு கட்டிக் கொடுத்திருக்கிறது. மொத்தம் 22 வீடுகள். அதன் நிலை சொல்லாமலே புரிந் திருக்குமே!

இந்த வீடுகள் எந்தத் திட்டத்தில் கட்டப் பட்டது என்பது பஞ்சாயத்துத் தலைவரான கலோசனுவுக்கே தெரியவில்லை!



கலோசனு

இப்போது இந்த வீடு களுக்குப் பின்னால் கக்கூஸ் என்ற பெயரில் மூன்றுக்கு இரண்டடியில் சிறிய அறை ஒன்றை எழுப்பிக் கொண் டிருக்கிறார்கள். கட்டப்பட் டுக் கொண்டிருக்கும் அதன் சுவர்களைப் பார்த்தபோது ஒப்பந்தக்காரர் எவ்வளவு லாபம் சம்பாதித்திருப்பார் என்று புரிந்தது.

"இதை யாருங்க கேட் டது. வீட்டை ஒழுங்காக் கட்டியிருந்தாங்கன்னு நல்லா இருந்திருக்கும்" என் றார் வீரய்யன்.



தண்ணீரையே கண்டிராத ஹரிஜனக் காலனிக் குழாய்.

வீட்டுக்குள் சென்று பார்த்தபோது அங் கங்கே சுவர்கள் வெடித்திருந்தன. கட்டப் பட்ட ஓராண்டுக்குள்ளாகவே கூரைச் சட்டங் கள் இற்றுப் போய் மாவாக உதிர்ந்து கொண் டிருந்தன. அப்படி ஏமாற்றியிருக்கிறார்கள் அந்த அப்பாவி கிராம மக்களையும் வரி



காளியம்மா: "பாவிங்க ஏமாத்திட்டாங்க...."

செலுத்தும் மக்களையும்!

இந்தியாவின் ஆன்மா கிராமங்களில் இருக்கிறது என்றார் மகாத்மா. அதன் குரல் வளையை நெரிக்கக் கூடவே அரசாங்கம் என்ற ஒன்றும் இருக்கும் என்பதைச் சொல்ல மறந்துவிட்டார்.

— சின்னக் கண்ணன்

13

# மோகம் என்பது இதுதானோ?

உஷா சுப்பிரமணியன்



ஞானசுந்தரிக்கு எல்லாமே புதுமையாக இருந்தது. பரிவோடும், நகைச்சுவையோடும் ஆண் பெண் வித்தியாசமில்லாமல் பழகும் சத்தம், ஓயாத சிரிப்பு, பேச்சு... சொல்லப் போனால் அடிக்கடி உரசும் கண்ணாடிக் கோப்பைகள், அவற்றிலிருந்து எழும் பழ வாசம், உயர எழும்பும் புகை இவை கூட இப்போது பாந்தமாகப் பட்டது.

வாழ்வில் சுதந்திரம் என்பது எவ்வளவு அற்புதமான உணர்வு. கணவன், குடும்பம் என்ற சின்ன வட்டத்தில் அது சுத்தமாகப் பறி போய்விடுகிறது. சொந்த அத்தை வீடு என்றாலும் நேரம், காலம் தாழ்த்திப் பேசிக் கொண்டிருக்க முடியுமா? கணவன் பள்ளியிலிருந்து வந்திருப்பாரே, அவருக்கு உணவளிக்க வேண்டுமே என ஓடி வர வேண்டும். எவ்வளவுதான் ஆசையிருந்தாலும், தொடர்ந்து மூணு ஷோ சினிமா பார்க்க முடியுமோ? தட்டிக் கேட்கவில்லையென்றால் கூடத் தான் செய்வது சரிதானா என்று குற்ற உணர்வு இடிக்கும். நம்மைப் பார்த்துக் குழந்தைகள் கெட்டு விடுவார்களா என உள் மனம் உறுத்தும். பெரிய கழுத்து வைத்து ரவிக்கை போட்டால், யாராவது ஏதாவது சொல்லுவார்களோ என்று சமூகத்திற்குப் பயந்து புடைவையை இழுத்து மூடச் சொல்லும். படுக்கையில் உறவாடும் கணவன்தான் என்றாலும் நாலு பேர் முன் தோளில் கை போட்டு அணைக்க நாணமும், நாசூக்கும், கண்ணியமும் இடம் தராது. உறவுகளுக்கும், சமூகத்துக்கும் சொல்லப் போனால் நம்மையே கண்டு நாம் பயந்து வாழ்வதா குடும்ப வாழ்க்கை. எதைத் தேடி அனைவரும் சொல்லி வைத்தது போல் குடும்பம் எனும் பாழ் குழியில் விழுகிறார்கள்... ஞானத்துக்குப் புரியவில்லை.

கடந்த மூன்று நாட்களாக இங்கே எந்த விதக் கட்டுப்பாடுமில்லை.... சமைக்க வேண்டுமே, வேலைக்குச் சோறு பரிமாற வேண்டுமே என்ற கவலையில்லை. ஓயாமல் விதம் விதமான சாப்பாடு வண்டியில் வந்தது. நினைத்தபோது சாப்பிட்டார்கள்; அல்லது சாப்பிடாமல் இருந்தார்கள். பாடத் தெரிந்ததோ இல்லையோ கூட்டமாகப் பாடினார்கள். வேன்களில் ஏறிக் கொண்டு சென்னையில் ஓர் இடம் விடாமல் சென்று பார்த்தார்கள். கோடம்பாக்கத்தில் ஸ்டூடியோக்களைப் பக்தியுடன் சுற்றி வந்து புளகாங்கிதம் அடைந்தார்கள்.

வந்த அன்றைக்கே அனைவருக்கும் கட்சி நிறங்களில் கரை போட்ட சில்க் புடைவை தரப்பட்டது. அதுவும் ஒன்றில்லை. ஒரு ஜோடி.... ஒவ்வொரு புடைவையும் முந்நூறு ரூபாய்க்குக் குறையாது எனத் தோன்றியது. ஞானம் புடைவையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து மகிழ்ந்தாள். என்ன வழுவழுப்பு, என்ன பளபளப்பு! அவள் திருமணத்திற்குப் பின் இப்படி ஒரு புடைவையை அவள் வாங்கியதுமில்லை, அவள் பொருளாதாரம் அதற்கு இடம் தந்ததும் இல்லை. இத்தனை வருடங்கள் கழித்துத் தன் பெண்ணின் திறமையால் அவளுக்கு இப்படி ஓர் அதிர்ஷ்டம் கிடைத்துள்ளது. அருகே இருந்த புவனாவை அணைத்து உச்சி மோந்தாள்.



''அம்மா! யாரிடமாவது வெள்ளைத் தாளும், பென்சிலும் கேட்கட்டுமா.... இங்கே நாம் பார்த்தது, பேசினது எல்லாம் அப்பாவுக்கு எழுதணும்...'' புவனா ஆவலுடன் கேட்டாள்.

மகளின் பேச்சு இந்தச் சுகத்தின் நிரந்தரமின்மையையும், நிஜமான அவள் குடும்ப வாழ்க்கையை ஞாபகப்படுத்துவதாகவும் அமையவே ஞானத்துக்குக் கோபம் வந்தது. ''வாயை மூடடி..அப்பாவாம் அப்பா.... உங்கப்பாவையும் அவர் வாழற பெரிய பட்டணத்தையும் விட்டால் உனக்கு வேறே நினைப்பே இருக்காதே....'' எனச் சிடுசிடுத்தாள்.

அம்மா ஏன் காரணமின்றிக் கோபிக்கிறாள் என்று புவனாவுக்குப் புரியவில்லை. கிளம்பும்போது அப்பா அவர்களுக்கு மனதார விடை தரவில்லை என்பதால், அவர் மீது இன்னுமா கோபம் தணியவில்லை. புவனா இங்கே அனுபவித்து வரும் மகிழ்ச்சியை விவரமாக எழுதினால் அவர் கட்டாயம் சந்தோஷப்படுவார். அப்பா இவர்களுடன் இங்கேயிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்...

''ஏம்மா.... அப்பாவுக்குக் கடிதாசி போட்டு அவரையும் லோகுவையும் கூட இங்கே வந்திட்டுப் போகச் சொல்லலாமே....''

''ஆமா.... உங்கப்பாரு மகள் கடிதாசு போட்டு அழைச்சுட்டாளேன்னு ஒடனே காரு போட்டுக்கிட்டு ஓடி வந்துடுவாரு பாரு. அவருக்கு எதுக்கும் குடுப்பினை கிடையாது. மத்தவங்களுக்கும் இல்லாம செய்யறதுலே ஒரு திருப்தி.''

''போம்மா... அம்மா, அப்பாவைத்திட்டாதீங்க....'' புவனா சிணுங்கினாள்.

''என்ன பாப்பா, பாட்டெல்லாம் பாடம் செய்துட்டாயா?'' மூன்றுநாட்களாகப் பார்க்கவே முடியாத அளவு பிஸியாகியிருந்த தமிழ்ச் செல்வன் விசாரித்தான்.

ஞானம் அடக்க ஒடுக்கமாகப் போர்த்திக் கொண்டு, பவ்யமாக எழுந்து நின்றாள். ''எல்லாம் தயாருங்க.''

''சாயரட்சைக்கு நம்ம மந்திரி ம.ரா. வராரு இங்கே. கட்சித் தொண்டர்களை நேரில் பார்த்துப் பேசணும். குரு.... மறுக்க முடியுமா? நம்ம கட்சிப் புடைவையைக் கட்டிக்கிட்டு ஜம்முனு ட்ரெஸ் பண்ணிக்குங்க. என்ன பாப்பா... மேக்—அப் எல்லாம் போட்டுக்கிறயா?'' தமிழ்ச் செல்வன் புவனாவின் கன்னத்தை மெல்லத் தடவ, அவள் அவன் கையைப் படாரெனத் தட்டிவிட்டாள்.

''அட, அட... உங்க பெண்ணைப் பாருங்க வாத்யாரம்மா. என் கண் முன்னால் அரசிலை கட்டாம தின்ன பொண்ணு. நான் குழந்தையாச்சேன்னு தொட்டால் என்னமாச் சீறுது பாருங்க...

ஞானம் புவனாவை உருட்டி விழித்தாள். தமிழ்ச் செல்வனிடம் மன்னிப்புக் கேட்கும் பாவனையில், ''அது என்னிக்குமே அவங்க

அப்பா மாதிரி ரோசக்காரிங்க. சின்ன விஷயத்துக்கெல்லாம் பொத்துக் கொண்டு வரும். அதுவுமில்லே, அவ இப்ப குழந்தையில்லேங்களே, வயசுக்கு வந்த பெண்ணுச்சே...'' என்றான்.

இந்த ஒப்புதலுக்காகக் காத்திருந்தது போல் தமிழ்ச் செல்வன் அவளை மேலும் கீழுமாகப் பார்த்தான். வயசுக்கு வந்தாலும் இப்போ ஒன்றும் பிரமாதமாக வளர்ந்து விடவில்லை. ஆனாலும் இப்படியே. நின்று விடுவாளா என்ன? தாயாரைக் கொண்டால் தளதளவென்று உடம்பு தக்காளிப் பழம் மாதிரி குலுங்க வேண்டும். அந்த உதவாக்கரை அப்பனைக் கொண்டாலும் அழகாகத்தான் விளங்க வேண்டும். கொஞ்சம் உடம்பு பூசினாற்போல் சதைப் பிடிப்பு ஏற்பட்டால் கட்டாயம் இந்தப் பெண் பெரிய நடிகைகளையெல்லாம் வீழ்த்திவிடுவாள். இவளை நன்றாகப் பக்குவப்படுத்த வேண்டும். இப்போதே கட்சிக்குப் பெண்கள் மத்தியில் செல்வாக்கு குறைந்துவிட்டது. கவர்ச்சிகரமான ஆனால் நடிகையல்லாத குடும்பப் பாங்கான இமேஜ் உள்ள பெண் வந்துதான் இனிமேல் கட்சியின் கௌரவத்தைப் பெண்கள் மத்தியில் வளர்க்க வேண்டும். இந்தப் பெண்ணைப் பதமாகப் பறித்து, தயார் செய்தால் அவனுக்கும் நல்லது, கட்சியின் எதிர்காலத்துக்கும் நல்லது. ம. ரா. விடம் ஒருமாதிரியாகச் சொல்லி வைக்க வேணும். ஏதாவது ஸ்காலர்ஷிப், பாட்டுக்காக மேல் படிப்புக்கு அரசு உதவி என்கிற மாதிரி இங்கேயே நிறுத்திக் கொண்டால் வேலை சுலபமாகும். சொந்த ஊரில், பெத்த அப்பன் பாதுகாவலில் இதெல்லாம் சாத்தியமாகாது. தமிழ்ச் செல்வனின் வக்ர மனம் திட்டங்களைத் தீட்டியது.

அமைச்சர் வரவுக்கென இவர்கள் தங்கியிருந்த கார்ப்பரேஷன் பள்ளியே விழாக் கோலம் கொண்டது. ஒவ்வொரு மாவட்டத் தொண்டரும் ஒரு மாநகரப் பள்ளியில் இறக்கப்பட்டிருந்ததால், தமிழ் இலக்கிய விழாவை முன்னிட்டுப் பள்ளிகள் ஒரு வாரம் மூடப்பட்டிருந்தன. மாணவர்களுக்குப் படிப்பிக்க வேண்டிய அவசியமில்லை என்றாலும், ஆசிரியர்கள் என்னவோ கட்சி வேலைக்குக் கட்டாயமாக ஆஜர் ஆக வேண்டும் என்று அழைக்கப்பட்டிருந்தார்கள். பத்தாவதைக் கூட எட்டாத பல கட்சித் தொண்டர்கள் அந்த எழுத்தறிவிக்கும் ஆசான்களை ''யோவ், ஒரு கட்டு பொகையிலை வாங்கியா... இங்கே மேல் நாட்டு சரக்குக் கடை பக்கத்திலே எங்கிருக்கு?'' என்று ஓட ஓட விரட்டிக் கொண்டிருந்தார்கள். தன்மானத்தை வயிற்றுப் பாட்டுக்கு அடமானம் வைத்துவிட்ட ஆசிரியர்களும், இதனால் ஏதாவது ஆதாயமாவது கிடைக்காதா என்று தொண்டர் படைக்கு உழைத்துக் கொண்டிருந்தார்கள். கல்வி, கலை, இலக்கியம் போன்ற பெரிய, பெரிய பொருள் புரியாத பெயர்களெல்லாம் ஆரவாரத்துடன் அரசியல் உற்சவ மூர்த்திகளின் நகர்வலத்துக்குப் பயன்பட்டுக்கொண்டிருந்தன.

பள்ளிகளின் சுற்றுப்புறத்தில் ப்ளீச்சிங் பவுடரையும் மீறி நாற்றம் ஊரைத் தூக்கியது. பற்பல இடங்களில் பொருத்தப்பட்ட மைக்குகள் 'நேத்து ராத்திரி யம்மா' என்று துடித்துக் கொண்டிருந்தன. சற்றே 'கிக்' ஏறிய தொண்டர்கள் இந்த இசையுடன் சேர்ந்து குலுக்கி முத்தமிழுக்கும் பெருமை சேர்த்துக் கொண்டிருந்தார்கள். சென்னை நகரத்துச் சுவர்களெல்லாம் அமைச்சர்களுக்கு அடைமொழி சேர்த்து வாழ்த்துக் கூறிக் கொண்டிருந்தன. பசும் புல்லையே பார்த்திராத நாலு கால் ஜீவன்கள் இரண்டு கால் மனிதர்களின் தயவால் போஸ்டர் பசைகளை ஜீரணித்துப் பசிப்பிணி ஆற்றிக் கொண்டிருந்தன. சரக்கேற்ற மட்டுமே லைசென்ஸ் பெற்ற திறந்த லாரிகள் ஒட்டு மொத்தமாக அரசவைக்கு ஆணையிடப்பட்டன. வெளியூரிலிருந்து வந்தவர்கள் பட்டணம் பார்க்க ஏதுவாக லாரிகளின் முன்புறம் கட்சிக் கொடிகள் பறக்கவிடப்பட்டன. ஒவ்வொரு லாரியிலும் மூச்சு முட்டு மளவு 'ஓட்டுக் கூலிகள்' அடைக்கப்பட்டு, செத்த காலேஜ், உயிர் காலேஜ் பார்த்தனர். லாரியில் பத்து கிலோ சாமான் அதிகம் ஏற்றினாலும் கைகாட்டி நிறுத்திய காவல் காரர்கள், மனிதர்கள் நிரப்பப்பட்டு பஸ்ஸாக மாறியிருந்த லாரிகளிலிருந்த கட்சிக் கொடிகளைக் கண்டு கைமறைத்து, சிரம் தாழ்த்தி விடை கொடுத்தார்கள். மவுண்ட் ரோடு பிளாட்பாரங்களில் முத்தமிழ் வள்ளல் பவனி வரும் போது, மக்கள் ஆர்வ மிகுதியால் நடுவே பாய்ந்துவிடாமல் சவுக்கு மரத் தடுப்புகள் போட இலகுவாய்ப் பிளாட்பாரங்கள் குண்டும் குழியுமாய் வெட்டப்பட்டன.

மொத்தத்தில் சென்னை நகரே, இதுவரை பார் காணா விதத்தில் விழாக்கோலமிட்டது.

ஆதிமனிதனின் கூட்டச் செயல்பாட்டை இன்னும் தவறாமல் கடைப் பிடித்து வந்த நாகரிகத் தமிழினமே பிரமித்தது. இத்தனை மக்களைக் கவர்பவரா, நம் தலைவர். இவ்வளவு தோழர்களின் நேசத்தைப் பெற்றவரா நம் தலைவர். இப்படிப்பட்ட விழா எடுக்கும் திறமை படைத்ததா இவர் கட்சி, அப்படியானால் அவர் உண்மையிலேயே பெரிய மனிதராகத்தான் இருக்க வேண்டும் என்று தாங்களும் இந்தக் கூட்ட மனோதத்துவத்திலிருந்து விலகாமல் பற்றிக் கொண்டனர். வாழ்க்கையின் இனைப்படிப் போராட்டத்திலிருந்தும், நிதர்சனங்களிலிருந்தும் இத்தகைய விழாக்கள் தற்காலிகத் தப்புவிப்பை அளித்தன.

'அண்ணன் வர்றாரு... அண்ணனுக்கு இப்படியிருந்தாத்தான் பிடிக்கும். அண்ணன் கோவிச்சுப்பாரு' என்ற பலவித உத்தரவுகளுக்கு நடுவே ம.ரா.வை வரவேற்க இவர்கள் குழு தயாராகிக் கொண்டிருந்தது.

''தாய்க் குலம் முன்னாலை வாங்க... செல்வி தாய்மாருங்களை ஒருபுறமா நிறுத்து. அந்தச் சின்னப் பாப்பாவை முன்னாடி விடு. அது அண்ணனுக்குப் பூச்செண்டு தரட்டும்...''

** நம்பிக்கை: பொழுது விடியும் முன்பே இருட்டில் கூவும் பறவை போன்றது.

## அருள்வாக்கு



**வீடு** அழுக்கு இல்லாமல் இருந்தால் போதாது. துணி அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. உடம்பு அழுக்கு இல்லாமலிருந்தால் போதாது. நம் மனம் அழுக்கு இல்லாமல் ஆக வேண்டும்.

இதற்கு சாக்ஷாத் பராசக்தியும், பரமேச்வர பத்தினியுமான அம்பாளுடைய சரணாரவிந்தத் தியானம்தான் வழி. அம்பாளின் சரணத்தைத் தியானித்துக் கொண்டே இருந்தால் அழுக்கெல்லாம் போய், குறை எல்லாம் தீர்ந்து பூர்ணமாக அப்படியே நிரம்பிப் போய்விடுவோம். அழுக்கும் குறையும் உள்ள ஜீவர்களாக நாம் உண்டாகியிருப்பது அவள் விளையாட்டுத்தான். எனவே இதிலிருந்து நம்மை மீட்டு நிர்மலமாக, பூர்ணமாகப் பண்ணுவதும் அவள் காரியம் தான்.

அம்பாளின்தியானத்தைவிடவேறு மதம் வேண்டியதே இல்லை. சாந்தியும் ஆனந்தமும் தந்து நம்மைப் பூரணத்துவம் அடையச் செய்வது அதுவே.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

---

தமிழ்ச் செல்வனும், பரமசிவமும் ஓயாமல் ஓடிக் கொண்டிருந்தார்கள்....

நாலரை மணிக்கு வருவதாகச் சொல்லியிருந்தவருக்குக் காத்திருந்து, காத்திருந்து காலே வலிக்கத் துவங்கியது. தலைவர் முன் செருப்பணியக் கூடாது எனக் காலணிகளைக் கழற்றி நின்றதில் சென்னை நகரச் சித்திரை வெயில் இந்த வேளையிலும் காலைப் பதம் பார்த்தது.

கடைசியாக... ஒவ்வொன்றாகக் கார்கள் வந்து நிற்க, தொண்டர்கள் இறங்கி நாட்டுப்புறத்திலிருந்து வந்திருந்தவர்களை ஜபர்தஸ்து செய்து விரட்டினார்கள். இந்த சாம்ராஜ்யத்தில்சிற்றரசனாகஇதுவரைஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்த தமிழ்ச் செல்வன் கூனிக் குறுகி, 'ஒதுங்கித்தான் நிக்கறேண்ணே...'' என்று பணிந்தான். இங்கே சின்ன எதிர்ப்புக்கூட ஆளை வீழ்த்திவிடும் என்பது அனைவருமறிந்த உண்மை.

ம.ரா. தொண்டர்கள் கதவு பிடித்து நிற்க, காரிலிருந்து ஆர்ப்பாட்டமாக இறங்கினார். சுற்றுமுற்றும் அலட்சியமாகப் பார்த்தார். ''தமிழிலக்கியத் தொண்டன் ம.ரா. வாழ்க...'' ''இலக்கியச் செம்மல் அண்ணன் வாழ்க'' ''மூதறிஞர் ம.ரா. வாழ்க....'' எனக் கோஷம் வான்பிளந்தது.

ம.ரா. பள்ளிக்கூடத்தில் அதிகம் தங்கியவரில்லை. எனவே இந்தப் பட்டங்கள் அவரை மிகவும் மகிழச் செய்தன. அவர் ஜாதி மக்கள் அதிகமாக அவர் தொகுதியில் இருந்தது மட்டுமே அவர் அரசியலுக்கு ஆதாரமாக உள்ளது. இந்த நாட்டில் அரசியல்வாதிகள் உருவாக அடிப்படையே ஜாதி உணர்வுதான் என்றாகிவிட்ட நிலையில் ஜாதியைக் காக்கச் சலுகைகளும் நிறையவே அள்ளி வீசப்பட்டன.

''வாங்க அண்ணாச்சி... இவங்க திருவையாறு தொகுதி. இவங்க மன்னார்குடி. இந்தம்மா கருப்பூர் ஸ்கூல் டீச்சர்...'' தமிழ்ச் செல்வனின் அறிமுகங்களை அமைச்சர் அவ்வளவாகக் காது கொடுத்துக் கேட்கவில்லை. தினம் அறிமுகப்படுத்தப்படும் ஆயிரக் கணக்கான முகங்களைத் தொகுதி பிரிப்பது சுலபமா என்ன?

''வாங்க அண்ணாச்சி... மேடை சின்னதாகத்தான் போட்டிருக்கோம். உங்க ஆசீர்வாதத்தை மேடையேறிச் சொல்லணும்...'' காலில் விழுந்து வணங்கியவர்களிடமிருந்தும் கட்டியணைத்த முதிய தாய்க்குலத்திடமிருந்தும் அமைச்சர் நழுவி மேடையேறினார்.

''ஏ பாப்பா... வா, வா... அண்ணனுக்கு வாழ்த்துப் பாடு....'' கூட்டத்தில் நெருக்கப்பட்டு ஒன்றும் விளங்காமல் விழி பிதுங்கிக் கொண்டிருந்த புவனாவை, ஞானம் நெட்டித் தள்ளினாள்.

''வாத்தியார் ஊட்டம்மா, அண்ணனுக்கு நேரமாச்சு. பாப்பாவைச் சீக்கிரம் வரச் சொல்லுங்க.'' மேடையில் யாரோ அவசரப்படுத்த ஞானம் புடவை நழுவ, முடி கலைய, கூட்டத்தைத்தள்ளிக்கொண்டு மகளை மேடையேற்றினாள். புவனா மைக் முன் நின்று தமிழ் வாழ்த்துப் பாடி, கட்சித் தலைவர் மகிமையும் பாடினாள். தொடர்ந்து ம.ரா. 'தமில் வலர' வேண்டிய அவசியத்தை வலியுறுத்தி நாலு வரி பேசி, தலைவன் மகிமையை நாலு நிமிடம் தொடர்ந்தார். பேசும்போதே அவர் பார்வை மகள் சரியாகச் செயல்படுகிறாளா என்று கவலையுடன் பார்த்தபடி நின்ற ஞானசுந்தரியை மேய்ந்தது. 'சரியான கட்டை'' என்று மனம் தாளம் போட்டது. தொகுதிச் செயலரை நாசூக்காக விசாரிக்க வேண்டும் என்று குறிப்பெழுதிக் கொண்டார்.

(தொடரும்)

கல்கி: திருச்சி கே. கே. நகர் அருகில் — புதுக்கோட்டை மாவட்ட ஆரம்பத்திலுள்ள இச்சிக்கா மலைப்பட்டி என்னும் கிராமத்தில் இரண்டு ஈயப்பட்டறைகள் இயங்குகின்றன. அதிலிருந்து வரும் புகையால் அக்கிராமத்தி லுள்ள மக்களுக்குத் தலைவலி, வாந்தி, மயக்கம், கண் எரிச்சல் என்று பல வியாதி கள் வருவதாகச் சொல்கிறார்கள். நாங்கள் சென்றிருந்த போது அப்புகையால் எங்களுக்குக்கூடக் கண் எரிச்சல் ஏற்பட்டது. இவற்றோடு அந்தப் பட்டறைகள் காரணமாக இதுவரை அந்தக் கிராமத்தில் நூற்றிருபது கால் நடைகள் இறந்துவிட்டதாகச் சொல் கிறார்கள். இதுபற்றிப் பலமுறை மனுக் கொடுத்தும் பயனில்லை. காரணம் பட் டறை முதலாளிகள் முசிறிப்புத்தனுக்கு வேண்டியவர்கள் என்பதுதான் என்கிறார் கள் அவர்கள்!

புதுக்கோட்டை மாவட்டக் கலெக்டர் இல. பழமலை: அந்தப் பட்டறைகள் குறித்து விராலிமலை பஞ்சாயத்து யூனியனில் தீர் மானம் போட்டிருக்கிறார்கள். சுற்றுப்புறச் சூழல் மாசுக் கட்டுப்பாட்டு வாரியமும் தீர் மானம் போட்டிருக்கிறது. கீரனூர் கோர்ட் டில் வழக்கும் தொடரப்பட்டிருக்கிறது. ஆனால், அந்தப் பட்டறைகள் காரணமாகத் தான் கால்நடைகள் இறந்திருக்கின்றனவா என்பது ஆய்வுக்குரிய விஷயம்.

கல்கி: லைசென்ஸ் இல்லாமலேயே இயங்கும் அவற்றை உடனடியாகத் தடை செய்ய முடியாதா?

கலெக்டர்: அப்படிச் செய்வதற்கு நடை முறைச் சிக்கல்கள் நிறைய இருக்கின்றன.

கல்கி: இதுமாதிரியான நடைமுறைச் சிக்கல்கள்தான் மக்களுக்கு அரசின் மேல் நம்பிக்கை இழக்கச் செய்கின்றன. அந்தக் கிராம மக்கள் பல அதிகாரிகளிடம் முறையிட்ட போதும் 'தயவு செய்து நீங்கள் அந்தப் பட்டறைகள் இயங்கும் நேரமான காலை பத்து மணி முதல் மாலை மூன்றரை மணிக்குள் வாருங்கள்' என்று குறிப் பிட்டு வற்புறுத்திச் சொன்ன பிறகும் கூட அந்த அதிகாரிகள் மாலை மூன்றரை மணிக்கு மேல்தான் வந்து பார்வையிட்டார்களாம்! அதனாலும் அந்த மக்கள் நம்பிக்கையிழந்திருக் கிறார்கள்...

கலெக்டர்: மாவட்ட எல்லையிலுள்ள அந்தக் கிராமத்திற்குப் போய்ச் சேரவே நிறைய நேரமாகிறது என்பதுதான் அதிகாரி களின் தாமதத்திற்குக் காரணமே தவிர வேறில்லை.

கல்கி: நாங்கள் ஒரு மணி நேரத்திலேயே

# "சில குறைகள்



போய்ச் சேர்ந்து விட்டோமே!

கலெக்டர்: கடந்த 17.9.86 அன்று சுகா தார அலுவலரும் சென்று பார்த்துப் புகை வருவது பற்றிப் புகார் எழுதியிருக்கிறார். வழக்கும் போட்டிருக்கிறோம். அதன் முடிவுக் காகத்தான் காத்திருக்கிறோம். அதோடு அந்தக் கிராமத்திலுள்ள குடிநீரும் குடிக்க லாயக்கானதுதானா என்பதைக் கண்டறிய ஆய்வுக்கு அனுப்பியிருக்கிறோம். ஆக, அதி காரிகளுக்கு அக்கிராம மக்கள் நலனில் அக்கறை இருக்கிறது என்பது உண்மை.

கல்கி: சுற்றுப்புறச் சூழல் தூய்மைக் கட்டுப் பாட்டுத் துறையின் துணைச் செயலாளர் கே. என். ரத்தினவேலு என்பவருக்கு, 'அவ் விரண்டு தொழிற்சாலைகளும் கடந்த ஒரு மாத காலமாக இயங்கவில்லை' என்று நீங்கள் தெரிவித்திருக்கிறீர்கள். ஆனால் அவை எப் போதும் இயங்காமல் இருந்ததில்லை என்கிறார் களே அக்கிராம மக்கள்?

கலெக்டர்: இப்போது தீவிரமாக நடவ டிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் ஒரு நல்ல முடிவு ஏற்படும் என்றும் நம்புகிறோம்.

கல்கி: அதே கிராமத்திலுள்ள ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளியில் நாற்பத்தி ரண்டு குழந்தைகள் படிக்கிறார்கள். ஆனால் கட்டடம் படு மோசம். அப்பள்ளிக்குக்

கதவே இல்லை. ஆஸ்பெஸ்டாஸ் கூரையில் பாதியைக் காணவில்லை. தரையும் குண்டும் குழியுமாகக் காட்சியளிக்கிறது....

கலெக்டர்: நிதிப் பற்றாக்குறைதான் காரணம். கடந்த ஒரு வார காலத்திற்கு முன்பு தான் ஒவ்வொரு பஞ்சாயத்திற்கும் பத்து லட்ச ரூபாய் வீதம் மொத்தம் ஒன்றரைக் கோடி ரூபாய் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. இனி நிலைமை சீராகிவிடும்.

கல்கி: விராலிமலையிலுள்ள நிலவள வங்கியில் கடன் வழங்கியது தொடர்பாக நிறைய முறைகேடுகள் நடந்திருப்பதாகச் சொல்கிறார்கள். அதாவது, விராலிமலை ஒன்றியத்திலுள்ள பாக்குடி கிராமத்திலிருக்கும் அப்பாவுச் செட்டியார் என்பவருக்குக் கிணறு இல்லாமலேயே கிணறு வெட்டியதற்கும், பம்ப்செட் வாங்காமலேயே பம்ப்செட் வாங்கியதற்கும் கடன் வழங்கப்பட்டிருக்கிறது! இதோடு கடந்த 25.1.77 அன்று தெரசம்மாள் (க/பெ. சிங்கராயர், மதயானிப்பட்டி), என்பவருக்கும் 31.8.77 இல் ஜோதியம்மாள் (க/பெ. கலியமூர்த்தி, தெற்குத் தெரு, விராலிமலை) என்பவருக்கும், 19.10.77 இல் சுசிலா (க/பெ. லட்சுமணன், விரலூர்) என்பவருக்கும் கடன் வழங்கப்பட்டிருக்கிறது. இதில் வேடிக்கை என்னவென்றால் இந்த மூவரின் *கணவன்மார்களும் விராலிமலை நிலவள வங்கியிலேயே சூப்பர வைஸர்களாக வேலை பார்ப்பவர்கள். இவர்கள் எப்படிச் சிறு விவசாயிகளாவார்கள்? இவற்றோடு முன்பு கணக்குப் பிள்ளையாக வேலை பார்த்த பெரிய விவசாயியான சாத்தப்பன் என்பவரின் மனைவி சிறு விவசாயி என்றும் கடன் வழங்கப்பட்டுள்ளது என்றும் குளத்தூர் தொகுதி எம். எல். ஏ. வான மாரிமுத்து எங்களிடம் சொன்னார். இது குறித்து மாவட்ட வளர்ச்சி மன்றக் கூட்டத்தில்கேள்வியெழுப்பியும்நடவடிக்கை எடுக்கப்படவில்லையென்றும் சொன்னார் அவர்!

கலெக்டர்: உங்களிடம் சொன்ன மாதிரியான புள்ளி விவரங்களுடன் அவர் அப்போது சொல்லவில்லை. எப்படியோ நீங்கள் இப்போது சொல்லி விட்டீர்கள். விசாரணை செய்கிறேன்.

கல்கி: இவற்றோடு, இந்தத் தகவல்களையெல்லாம் விராலிமலை நிலவள வங்கியில் குமாஸ்தாவாகப் பணியாற்றும் ஆறுமுகம் என்பவர்தான் எம். எல். ஏ. வுக்குக் கொடுத்திருக்க வேண்டும் என்று அவரை இப்போது சஸ்பெண்ட் செய்துள்ளார்கள். அதோடு, விராலிமலையிலிருந்து ஆவுடையார் கோயிலுக்கு மாற்றலாகிப் போன கோதண்டராமன் என்பவரை அவர் விராலிமலையில் அடித்ததாகவும் கேஸ் போட்டிருக்கிறார்கள் என்றார் எம். எல். ஏ.! ஆவுடையார் கோயிலுக்கு மாற்றலாகிப் போனவரை எப்படி விராலிமலையில் அடிக்க முடியும்?

கலெக்டர்: இப்போது அதுகுறித்து வழக்கு இருப்பதால் நாம் விவாதிப்பது சரியாக இருக்காது.

கல்கி: ஒவ்வொரு நிலவள வங்கியும் ஆறு மாதங்களுக்கு ஒருமுறை இன்ஸ்பெக்ஷன் செய்யப்பட வேண்டும். ஆனால் கடந்த நான்காண்டு காலமாக அப்படிச் செய்யப்படவில்லையாமே? இதிலிருந்தே அங்கு முறைகேடுகள் நடப்பது உறுதிப்படவில்லையா என்கிறார் எம். எல். ஏ.

கலெக்டர்: இதுபோன்ற கேள்விகளையெல்லாம்ஓர் எம். எல். ஏ. கேட்க வேண்டிய அவசியமில்லை. கேட்கவும் கூடாது.

கல்கி: ஆலங்குடியிலிருந்து பட்டுக்கோட்டை செல்லும் நெடுஞ்சாலையிலுள்ள சிக்கப்பட்டியிலிருந்து கொத்தமங்கலம் செல்லும் சாலையில் உள்ளது வெள்ளாகுளம் எனும் கிராமம். இவ்வூர் மக்களும் சுற்றியுள்ள சூரன் விடுதி, கல்லம்பட்டி, மணப்பட்டி, ஊத்தப்பட்டி ஆகிய கிராமங்களிலுள்ள மக்களும் சரியான சாலை வசதியில்லாமல் திண்டாடுகின்றனர். சுதந்திரம் கிடைத்த நாளிலிருந்து மனுக் கொடுத்தும் பயனின்றிப் போகவே, கடந்த பொதுத் தேர்தலைப் புறக்கணிக்க முடிவு செய்த போது, அப்போதைய மாவட்ட கலெக்டர் கற்பூரசுந்தரபாண்டியன் இவர்களைச் சமாதானப்படுத்தி, உறுதிமொழி கொடுத்தாராம். ஆயினும் பயனில்லை...

# இருப்பது உண்மைதான்!

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: இதோடு, அம்புலி ஆற்றில் ஒரு சிறு தடுப்புச் சுவர் கட்டிக் கொடுத்தால் பாசனத்திற்குப் பயனளிக்கும் என்கிறார்கள்.

கலெக்டர்: நிறைய 'செக்டேம்ஸ்' கட்ட உள்ளோம். ஆனால் சில இடங்களில் இதுமாதிரி கட்டும் போது சிலர் ஆதரித்தாலும் சிலர் எதிர்ப்பார்கள். அதையெல்லாம் கவனித்துத்தான் செய்யவேண்டும். கவனிக்கிறேன்.

கல்கி: கொப்பனாப்பட்டியில் 'சதர்ன் டிரேடிங் ஏஜென்ஸிஸ்' (1—33 சாலை வீதி, கொப்பனாப்பட்டி) என்ற பெயரில் தவணை முறையில் டூ—இன்—ஒன் போன்ற பொருள்களைக் கொடுப்பதாகச் சொல்லி, ராமநாதன் என்ற பிரதிநிதியொருவர் ஔரங்காபாத் சென்று அங்குள்ளவர்களிடம் ஆயிரக்கணக்கான ரூபாய்களை வசூலித்



* கலெக்டர் பேட்டியின்போது உடனிருந்த அலுவலர்களில் ஒரு பகுதியினர்....

திருக்கிறார். ஆனால் பொருள்கள் கிடைக்கவில்லை. இதுகுறித்து ஔரங்காபாத்திலிருந்து வந்த புகாரின் அடிப்படையில் நாங்கள் கொப்பனைப்பட்டி சென்று விசாரித்தபோது அந்த இடமே பூட்டிக்கிடந்தது. அதன் உரிமையாளர் திருமதி சரோஜா சந்தானம் என்பவரையும் கண்டுபிடிக்க முடியவில்லை!

கலெக்டர்: இதுகுறித்து இப்போது நீங்கள்தான் தகவல் கொடுத்துள்ளீர்கள். விசாரிக்கச் சொல்கிறேன்.

கல்கி: கே. புதுப்பட்டியிலுள்ள அரசினர் மருத்துவமனையில் பணியாற்றும் டாக்டர் மகாராணி, டாக்டர் கணேஷ் ஆகியோர் நோயாளிகளைச் சரிவரக் கவனிப்பதில்லையாம். டாக்டர் மகாராணி தம்மிடம் வரும் நோயாளிகளைப் பார்த்து 'இருபத்தைந்து ரூபாய் எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வா' என்று கூறுகிறாராம். எங்களுக்குப் புகார்கள் வந்துள்ளன.

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: சுமார் எழுநூறு மாணவ, மாணவியர் படிக்கும் அந்த ஊர் உயர்நிலைப் பள்ளியை மேல்நிலைப் பள்ளியாக்கப் பணம் கட்ட வேண்டும். அதை உடனடியாகக் கட்ட முடியாது என்பதால் அரசு கடனுதவி வழங்கினால் உதவிகரமாய் இருக்கும் என்கிறார்கள்.

கலெக்டர்: ஏற்கெனவே பணம் கட்டப்பட்ட ஊர்களுக்கே தாமதமாகிக் கொண்டிருக்கும் ஒரு நிலையில் இது சாத்தியமென்று நான் கருதவில்லை.

கல்கி: புதுக்கோட்டைக்கும் கே. புதுப்பட்டிக்கும் சென்று கொண்டிருக்கும் 27 ஆம் நெம்பர் மருதுபாண்டியர் போக்குவரத்துக் கழக பஸ்ஸோடு 27-ஏ என்னும் இன்னொரு பஸ்விட அக்கழகம் தீர்மானித்த போது அதற்கு எஸ். எம். டி. என்னும் தனியார் பஸ் நிறுவனத்தினர் தடையாக உள்ளார்களாமே?

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: கடியாப்பட்டி பஞ்சாயத்தில் பில் கலெக்டர் தியாகராஜன் என்பவர் போலி ரசீதுகள் கொடுத்ததன் மூலம் ரூ. 1,360.80 மோசடி செய்துள்ளதாக வழக்குத் தொடுக்கப்பட்டுள்ளது. இன்னும் விசாரித்துப் பார்த்தால் அவர் செய்த மோசடி சுமார் இருபத்தைந்தாயிரமாவது இருக்கும் என்கிறார்கள்.

கலெக்டர்: கிடைத்த வரைக்கும் சேகரித்துத்தான் வழக்குத் தொடரப்பட்டுள்ளது. பொது மக்கள்தான் இதற்கு ஒத்துழைப்புத் தர வேண்டும்.

கல்கி: இராயவரத்திலுள்ள கிராம சேவா சங்கம் எனும் துவக்கப்பள்ளி நிர்வாகி இராம. சீனிவாசன் என்பவருக்கும், அங்கு பணிபுரியும் ஆசிரியர்கள், சத்துணவு அமைப்பாளர் ஆகியோருக்கும் இடையிலுள்ள பூசலால் அங்கு படிக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது. நீங்கள்தான் விசாரித்துத் தவறுகளைக் கண்டுபிடித்துக் களைய வேண்டும்.

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: ஆவுடையார் கோயில் ஒன்றியத்திலுள்ள வேள்வரை எனும்கிராமத்தில் வற்றாத குடிநீர்க் கிணறு இருந்தும், பத்தாண்டுகளுக்கு முன்பே கட்டப்பட்ட மேல்நிலை நீர்த்தொட்டி இருந்தும் குடிநீருக்குக் கஷ்டப்படுகிறார்கள். காரணம் அங்குள்ள 1.5 குதிரைச் சக்தியுள்ள மோட்டார் ரிப்பேராகிக் கிடப்பதுதான். அதை மாற்றி ஐந்து குதிரைச் சக்தியுள்ள மோட்டார் வைக்க வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: மணமேல்குடி, ஆவுடையார் கோயில், அறந்தாங்கி தாலுகாக்களில் ஐம்பது லட்ச ரூபாய் செலவில் கூட்டுக் குடிநீர்த் திட்டம் என்ற திட்டத்தைச் செயல்படுத்த உள்ளோம். சுமார் முப்பத்தைந்து கி.மீ.தூரத்திற்குக்குடிநீர்க்குழாய்கள் போடப்படவுள்ள இத்திட்டம் வரும் மார்ச் 87 க்குள் முடிவடைந்துவிடும். அதில் நீங்கள் சொல்லும் வேள்வரை கிராமமும் பயனடையும்.

கல்கி: அந்தக் கிராமத்திற்குத் தேவையே ஐந்து குதிரைச் சக்தியுள்ள மோட்டார் தான், குழாய்கள் ஏற்கெனவே போடப்பட்டுள்ளன....

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: அதே வேள்வரை கிராமத்தில் ஆதி திராவிடர்களுக்காக ஓராண்டுக்கு முன்பு கட்டிக் கொடுக்கப்பட்டுள்ள இருபத்திரண்டு வீடுகளும் அதற்குள்ளாகவே விரிசல் கண்டுவிட்டன. ஒழுகுகின்றன. கூரைச் சட்டங்களெல்லாம் இற்றுப் போயிருக்கின்றன.

கலெக்டர்: ஆதி திராவிடர்களுக்காகப் பல்வேறு திட்டங்களில் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. அவற்றில் எந்தத் திட்டத்தின் மூலம் அங்கே கட்டிக் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பதை ஆராய்ந்து ஆவன செய்கிறேன்.

கல்கி: கீரமங்கலத்தில் தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியத்தால் கட்டப்பட்டுள்ள 'கைமுறைக் காகித அலகு பணிக்கூடம்' விஜயலட்சுமி பழனிச்சாமி தலைமையில், எம்.ஜி. ஆர். திறந்து வைத்ததாகப் பெயர்ப்பலகை பொறிக்கப்பட்டிருக்கிறது.

ஆனாலும் அது இன்னும் செயல்படத் துவங்கவில்லை. பூட்டித்தான் கிடக்கிறது!

கலெக்டர்: விரைவில் இயந்திரங்கள் வந்து விடும் என்றநிலையில் திறக்கப்பட்டது. இயந்திரங்கள் வரத் தாமதமானதால்தான் செயல்படவில்லை. விரைவில் இயங்க ஆரம்பித்துவிடும்.

கல்கி: இடையாத்திமங்கலம் ஆரம்பப் பள்ளியில் இருநூற்றைம்பது குழந்தைகள் படித்தும்முன்பு ஐந்து ஆசிரியர்களாகஇருந்த இடத்தில் இப்போது மூன்று ஆசிரியர்களாகக் குறைந்து போயிருப்பதாகச் சொல்கிறார்கள்.

கலெக்டர்: சில இடங்களில் ஆசிரியர் பற்றாக்குறை இருப்பது உண்மைதான். சில இடங்களில் ஆசிரியர்கள் இருந்தும் மருத்துவ விடுப்பு போன்ற நீண்ட கால விடுப்பில் செல்வதால் புது ஆசிரியர்களை நியமிக்க முடியாமல் போய்விடுவதும் உண்டு. கவனிக்கிறேன்.

கல்கி: அந்தக் கிராமத்திலிருந்து சுமார் நூறு மாணவ மாணவியர் சுமார் ஐந்து கி.மீ. தூரத்திலுள்ள மணமேல்குடிக்குச் சென்றுதான் மேல்நிலைப் பள்ளியில் படிக்க வேண்டியுள்ளது. அதற்கு பஸ் வசதியில்லாததால் திண்டாடுகிறார்கள்.

கலெக்டர்: உண்மைதான், கவனிக்கிறேன்.

கல்கி: அதே கிராமத்தில் சுமார் மூன்றாண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட குடிநீர்த் தொட்டி இன்னமும் திறக்கப்படவில்லை.

கலெக்டர்: ஆவன செய்கிறேன்.

கல்கி: செம்பாட்டூர் பெரிய கண்மாய் அடிக்கடி உடைப்பெடுத்துக் கொள்வதால் இராயவயல் எனும் கிராம மக்கள் பாதிக்கப்படுகிறார்கள். அதுமாதிரி சமயங்களில் மேட்டுப்பாங்கான இடத்தில் நிலம் வாங்கிக் காலனி அமைத்துத் தருவதாகப் பலமுறை உறுதிமொழி கொடுக்கப்பட்டும் ஏதும் நடக்கவில்லை என்கிறார்கள்...

கலெக்டர்: கரையைப் பலப்படுத்த ஆவன செய்கிறேன். அடுத்த ஆண்டில் ஆர்.எல்.ஜி.பி. திட்டத்தில் அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கவும் ஆவன செய்கிறேன்.

கல்கி: ஆலங்குடி தாலூகாவிலுள்ள பூவரசக்குடியிலுள்ள மக்கள் அங்குள்ள குடிகாட்டுக் கண்மாய் தண்ணீர் வரத்து வாரியிலிருக்கும் சர்வே எண் 44 மற்றும் 292/4—ல் உள்ள அரசு புறம்போக்குக் கரையில்தான் தொன்று தொட்டுப் பாதை உபயோகப்படுத்திக் கொண்டுள்ளார்களாம். ஆனால், அதைக் கடந்த 84—ல் மு.சி. ராமையா, வ.மு. குழந்தைவேலு அம்பலம், வா.கா. கருப்பையா அம்பலம் ஆகியோர் ஆக்ரமித்துக் கொண்டுவிட்டார்களாம். இது பற்றி 2.4.86 அன்று புதுக்கோட்டை கோட்ட வருவாய் அலுவலர் நேரடியாகப் பார்வையிட்டு, ஆக்ரமிப்பை அகற்றுமாறு ஆலங்குடி

தாசில்தார், கிராம நிர்வாக அலுவலர் ஆகியோரிடம் சொல்லியும் ஏதும் நடக்கவில்லையாம். தாசில்தாரை அணுகினால் நகட்டல் வார்த்தைகளைத்தான் சொல்கிறார் என்கிறார்கள் மக்கள்!

கலெக்டர்: ஆலங்குடி தாசில்தார் மிக நல்ல தாசில்தார் என்று அனைவரும் சொல்கிறார்கள். பார்க்கிறேன்.

கல்கி: பேராவூரணியிலிருந்து அறந்தாங்கி செல்லும் சாலையில், மேற்பனைக்காடு, ஆயிங்குடி ஆகிய ஊர்களுக்கிடையிலுள்ள சுமார் நான்கு கி.மீ. சாலை கடந்த பதினைந்து ஆண்டுகளாக மோசமான நிலையில்தான் இருந்து கொண்டிருக்கிறது. அறந்தாங்கி கோட்டப் பொறியாளரிடம் மனு கொடுத்தபோது, நடுவிலுள்ள ஒரு கி.மீ. சாலையைச் செப்பனிட்டு, மீதியை அப்படியே விட்டுவிட்டார்கள் என்பது அப்பகுதி மக்களின் புகார்.

கலெக்டர்: விரைவில் அதுவும் செப்பனிடப் படும்.

கல்கி: விராலிமலை ஒன்றியத்திலுள்ள அலங்கம்பட்டி கிராமத்திற்குக் கடந்த பத்தாண்டு காலமாகவே சரியான சாலை வசதி இல்லை என்கிறார்கள்.

கலெக்டர்: சரியாகப் போடவில்லை என்று அவர்களே வேலையைத் தடுத்தார்கள். என்ன செய்வது?

கல்கி: சரியாகப் போட வேண்டியது தானே!

கலெக்டர்: சரியாகப் போடவில்லையென்றால் புகார் செய்திருக்கலாம். அதை விடுத்துத் தடுப்பது எந்த முறையில் நியாயம்? அதனால் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் தங்கள் பணிகளைச் சரிவரச் செய்ய முடியாமல் போகிறது.

கல்கி: பரம்பூர் பஞ்சாயத்திலுள்ள கட்டம்பருயப்பட்டியில் மேல்நிலை நீர்த் தொட்டி ஒன்று கட்டுவதற்காகக் கடந்த 65—ம் ஆண்டே பரம்பூர்ப் பஞ்சாயத்தில் தீர்மானம் போட்டும் இன்னும் கட்டப்படவில்லை!

கலெக்டர்: அந்த ஊரின் மக்கள் தொகை எழுநூற்று இருபதுக்கு மேல் இருந்தால்தான் மேல்நிலை நீர்த் தொட்டி கட்ட முடியும். கவனிக்கிறேன்.

கல்கி: அம்மாப்பட்டினத்திலுள்ள ஊராட்சி ஒன்றியத் துவக்கப் பள்ளிக்கு மின்சார வொயரிங் செய்து தரும்படி, அதன் தலைமை ஆசிரியை கி. மீனாட்சி என்பவர் உள்ளூர்ப் பிரமுகர் ஒருவரை வேண்ட, அவரும் செய்து தந்திருக்கிறார். ஆனால் ஊராட்சி ஒன்றியப் பள்ளிகளுக்கு மின் கட்டணம் கட்ட நிதி ஒதுக்கீடு ஏதும் இல்லை என்பதால் மின் இணைப்பு வழங்கப்படவில்லையாம். பல பள்ளிகளிலும் இதுதான் நிலைமையாம்!

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டை — திருச்சி மெயின் ரோடிலுள்ள கீரனூரில் சரியான பேருந்து நிலைய வசதியில்லை.

கலெக்டர்: வேலைகள் ஆரம்பமாகியுள்ளன.

கல்கி: பல்லவராயன்பட்டி என்னும் ஊரில்சித்தமருத்துவமனைக்காகஒருகட்டடம் கட்டப்பட்டுக் கடந்த இரண்டாண்டு காலமாக அப்படியே கிடக்கிறதாம்!

கலெக்டர்: கவனித்து நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: நெடுவாசல் கிராமத்திலுள்ள சலவைத் தொழிலாளர்கள் தங்கள் தொழிலுக்கு மழை நீரையே நம்பியிருப்பதால் தொழில் பாதிக்கப்படுகிறதென்றும் அதனால் அவர்களுக்கென்று தண்ணீர்க் குழாய் அமைத்துத் தர வேண்டுமென்றும் விண்ணப்பிக்கிறார்கள்.

கலெக்டர்: விவசாயத்திற்கான தண்ணீருக்கே குழாய்க் கிணறுகள் அமைத்து முடிக்காத நிலையில் அரசால் இது சாத்தியமில்லை. இருந்தாலும் அத்தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கூட்டுறவுச் சங்கம் ஒன்றை ஏற்படுத்திக் கொண்டு என்னை அணுகினால் வங்கிகள் மூலம் கடனுதவி பெற்றுத் தரத் தயாராய் இருக்கிறேன்.

கல்கி: மூக்கண்ணுமலைப்பட்டியிலுள்ள தாய்—சேய் நல விடுதி நீண்ட காலமாகச் செயல்படவில்லை என்று சொல்கிறார்கள்.

கலெக்டர் (இந்த இடத்தில் மாவட்ட உடல் நல அலுவலர் டாக்டர் கே. சுப்ரமணியத்தைப் பார்க்க அவர் பதில் சொல்கிறார்): கட்டடம் பழுதாகிவிட்டதால் அங்கு செயல்படவில்லை என்பது உண்மைதான். ஆனாலும் அங்குள்ள ஸ்டாஃப் நர்ஸ் அவரவர் வீடுகளுக்கே சென்று பணியாற்றிக் கொண்டு தான் இருக்கிறார். இதுவரை அப்படி 144 குழந்தைகள் பிறந்திருக்கின்றன.

கல்கி: நமனசமுத்திரம் அருகிலுள்ள மேலத் தேமத்துப்பட்டியிலுள்ள அடிகுழாய் ரிப்பேராகி மூன்றாண்டுகளுக்கு மேலாகியும் சரி செய்யப்படவில்லை என்று எங்களைச் சந்தித்த அனைத்திந்திய ஜனநாயக மாதர் சங்கத்தினர் முறையிட்டார்கள்.

கலெக்டர்: இதுவரை என் கவனத்திற்கு வரவில்லை. ஆவன செய்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டை மாவட்டத்திலேயே புதுக்கோட்டையில்தான் ஒரு பெண்கள் கலைக் கல்லூரி இருக்கிறது. அதிலும் மூன்றாமாண்டு மாணவிகளைத் தவிர மற்றவர்கள் உட்கார பெஞ்ச் வசதிகள் இல்லையே?

கலெக்டர்: அதற்காக நிதி ஒதுக்கப்பட்டுள்ளதென்று கருதுகிறேன்.

கல்கி: நாங்கள் விசாரித்த வரையில் பழைய கட்டடங்களைப் பழுது பார்க்க மட்டும்தான் நிதி ஒதுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றுவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டை அரசு மருத்துவ மனையில் லஞ்சம் கொடுத்தால்தான் படுக்கை வசதி கிடைக்கிறதாம்!

கலெக்டர்: குடும்பக்கட்டுப்பாட்டின் கவனிப்பிலும் உபசரிப்பிலும் புதுக்கோட்டை தான் முன்னணியில் இருக்கிறது. இந்நிலையில் இக்குற்றச்சாட்டை நம்ப முடியவில்லை.

கல்கி: நெஞ்சு வலிக்காக 41—ம் வார்டில் அட்மிட் செய்யப்பட்டிருந்த ஜெயமேரி என்பவரைக் கடந்த 16.12.86 அன்று, வேறு யாருக்காகவோ வலுக்கட்டாயமாகத் தரையில் படுக்க வைத்திருக்கிறார்கள்!

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டையிலுள்ள ஒய்.எம்.எப்.ஏ.வினருக்கு ஒரு குறை. வாலிபால், பூப்பந்து போன்ற விளையாட்டுகளுக்கான கம்பங்கள் மரத்தாலேயே இருப்பதால் அடிக்கடி இருட்டுப் போகிறது. அதனால் அவற்றை இரும்புக் குழாய்களைக் கொண்டு அமைத்துத் தர வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: லேயன்ஸ் கிளப், ரோட்டரி கிளப் போன்றவர்களின் உதவியுடன் செய்ய முடியுமா என்று பார்க்கிறேன்.

கல்கி: இராஜகோபாலபுரத்தை வீட்டு வசதி வாரியம் நகராட்சியிடம் ஒப்படைக்கத் தயாராய் இருந்தும் நகராட்சி ஏற்றுக் கொள்ள மறுப்பதேன்?

கலெக்டர்: அந்தக் காலனிக்கு ரோடு வசதி குடிநீர் வசதி போன்றவற்றைச் செய்து ஒழுங்கான நிலையில் கொடுத்தால் நகராட்சி உடனடியாக எடுத்துக் கொள்ளத் தயாராய் இருக்கிறது. வெறுமனே கொடுத்தால் எப்படி எடுத்துக் கொள்ள முடியும்?

கல்கி: புதுக்கோட்டையிலுள்ள தண்டபாணிபுரம் இரண்டாம் வீதியையும், அண்ணாமலைச் செட்டியார் வீதி மற்றும் லட்சுமிபுரம் முதல் வீதி ஆகியவற்றை இணைக்கும் முனிசிபாலிட்டுக்குச் சொந்தமான வீதியை ஸ்ரீபிரகதாம்பாள் தியேட்டர் உரிமையாளர் (ஆர்.எம். வீரப்பன்) சட்ட விரோதமாக ஆக்ரமித்துக் கொண்டுவிட்டார் என்றும், இத்தனைக்கும் அந்த இடம் பொதுமக்கள் நன்மைக்காகக் கடந்த 23.3.42—ல் பழனியாண்டி சேர்வை என்பவரால் முனிசிபாலிட்டிக்குத் தானமாக வழங்கப்பட்டதென்றும் பொதுமக்கள் முறையிடுகிறார்கள். தியேட்டர் மானேஜரை விசாரித்தபோது தாங்கள் பணம் கொடுத்து வாங்கிய பட்டா நிலம் என்கிறார்கள். நீங்கள்தான் உண்மையைக் கண்டறிய வேண்டும்.

கலெக்டர்: விசாரிக்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டையில் ஒரு பஸ் முதலாளிக்குச் சொந்தமான இரண்டு தியேட்டர்களில்தான் புளூஃபிலிம் போடுகிறார்கள். அவர் எப்போதுமே ஆளுங்கட்சிச் செல்வாக்குள்ளவர் என்பதால்தான் அதிகாரிகள், அடி, உதைகளுக்குப் பயந்து நடவடிக்கை எடுப்பதில்லையென்றும் சொல்கிறார்களே?

கலெக்டர்: புளூஃபிலிம் போடப்படும் போது தகவல் கொடுத்தால் நடவடிக்கை எடுக்கத் தயாராய் இருக்கிறோம்.

கல்கி: பஸ் நிலையத்திலுள்ள சைக்கிள் ஸ்டாண்டில் நள்ளிரவு பன்னிரண்டு மணியை நாள் கணக்கிட வைத்துக்கொண்டிருப்பதால், இரவு பதினொரு மணிக்குக் கொண்டு போய் சைக்கிளை விட்டு ஒரு மணிக்கு எடுத்தால் இரண்டு நாட்களாகக் கணக்கிட்டுக் கட்டணம் வசூலிப்பது அநியாயம் என்கிறார்களே?

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: புதுக்கோட்டை மாவட்டம் பின் தங்கிய மாவட்டமாக அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனாலும் டி.வி.எஸ்., எஸ்.ஆர்.எப்; மூர்க்கோ, டப்ளின், ராக்போர்ட் என்று பல தொழிற்சாலைகளிலும் வெளி மாவட்ட ஆட்களை வேலை செய்கிறார்கள் என்ற வருத்தம் மக்களிடையே உள்ளது.

கலெக்டர்: தொழிற்சாலைகளில் பணியாற்றத் தகுதியானவர்கள் இங்கே இல்லாமலிருக்கலாம். அப்படியே இருந்தாலும் இங்குள்ளவர்களைத்தான் வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்தச் சட்டமேதும் கிடையாதே!

கல்கி: பின்தங்கிய புதுக்கோட்டை மாவட்டத்தை முன்னேற்ற என்ன செய்கிறீர்கள்?

கலெக்டர்: எங்கள் மாவட்டத்தில் நிலத்தடி நீர் நிறைய இருக்கிறது. அதைக் கொண்டு முழு மூச்சுடன் விவசாய உற்பத்தியைப் பெருக்கும் திட்டத்தை மேற்கொண்டிருக்கிறோம். அதன் முதல் கட்டமாக மண் அரிப்பைத் தடுக்கும் நடவடிக்கையாக அங்கங்கே செக்டேம்ஸ் கட்ட உள்ளோம். முந்திரி விளைச்சலைப் பெருக்க உள்ளோம். குடுமியான் மலையில் விவசாயக் கல்லூரி ஒன்று ஏற்படுத்த இருக்கிறோம். தமிழகத்திலேயே புதுக்கோட்டை மாவட்டம்தான் கல்வியில் — குறிப்பாகப் பெண் கல்வியில் பின்தங்கியுள்ளது. அதற்கான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டுள்ளோம். குடிநீர் வசதிக்கான பல்வேறு திட்டங்களையும் செயல்படுத்தத் துவங்கியுள்ளோம். மீன் பிடி தொழிலை ஒரு கோடி செலவில் மேம்படுத்த உள்ளோம். சிறு தொழில், கைத்தொழில்களுக்கும் ஊக்கம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இவற்றோடு சித்தன்னவாசல், குடுமியான் மலை, நார்த்தா மலை, திருமயத்திலுள்ள தனிச் சிறப்பு வாய்ந்த விஷ்ணு குடைவரைக் கோயில், ஆவுடையார் கோயில் போன்ற சுற்றுலா மையங்களையும் பயணிகளைக் கவரும் வண்ணம் அமையத் தேவையான திட்டங்களை மேற்கொண்டிருக்கிறோம். ஆக, நான் குறைகளே இல்லையென்று சொல்லவில்லை. அங்கங்கே சில குறைகள் இருப்பது உண்மைதான். அதையெல்லாம் சுட்டிக் காட்டிய உங்களுக்கு நன்றி. வணக்கம்.

# சின்னச் சின்ன கனவுகள்

13

"**வா**டான்னு... அட வாடான்னு..."

பரிமளா நந்தகுமாரைக் கன்றுக்குட்டி போல் இழுத்து வந்தாள்.

'ப்ச்' என்றான் நந்தகுமார். அம்மாவைப் பார்த்தான்.

இந்திராவின் கைகள் பாத்திரத்தில் பதிந்திருந்தன. கண்களிலிருந்து இரு துளி கண்ணீர் இரண்டு சாம்பல் தேய்க்கப்பட்ட பாத்திரத்தில் விழுந்து, ஈரச் சாம்பல் கரைந்தது, கலந்தது.

"சரி, நீ சொல்ல வந்ததைச் சொல்லு..." பரிமளா அவனை விடுவதாயில்லை.

நந்தகுமாருக்கு அம்மாவிடம் இருந்த பயம் விலகிவிட்டதுபோல் இருந்தது.

"நான் இனிமேல் படிக்கப் போறதில்ல...." என்றான்.

இந்திரா திடுக்கிடலோடு நிமிர்ந்தாள். "என்ன சொல்றே நந்து?"

"ஆமாம்மா... நான் வேலையில் சேர்ந்துட்டேன்."

"வேலையா? யார் கொடுத்தாங்க உனக்கு வேலை?" என்றாள் பரிமளா.

"தீப்பெட்டி ஃபாக்டரில."

"ஏண்டா நந்து?"

"நான் சம்பாதிக்கப் போறேம்மா. அதனால, அதனால...." நந்தகுமாருக்கு அந்த வாக்கியத்தைப் பூர்த்தி செய்வதில் தயக்கம் இருந்தது.

"அதனால்?" என்று கேட்டாள் பரிமளா. இந்திரா அவன் சொல்லப் போவதை உணர்ந்து நந்தகுமாரை வெறித்தாள்.

"அம்மாவைக் கல்யாணம் பண்ணிக்க வேணும்னு சொல்லுங்க...." என்றான் பரிமளா பக்கம் பார்த்து.

பரிமளா சத்தமில்லாமல் சிரித்தாள். நந்தகுமாரின் கன்னத்தைத் தட்டினாள். "ஒனக்குப் பைத்தியம்தான் புடிச்சிருக்குது..."

"சம்பாதிச்சு அம்மாவைக்காப்பாத்தினால் பைத்தியமா?"

"சரி, நான் கேக்கறதுக்குப் பதில் சொல்லு...."

"என்ன?"

"இன்னிக்கு எவ்வளவு சம்பாதிச்சே?"

"ரெண்டு ரூபா..."

"இந்த ரெண்டு ரூபால எத்தனை அரிசி வாங்குவே?"

"நாளையிலேர்ந்து நெறையச் சம்பாதிப்பேனே...."

"புரிஞ்சும் புரியாத வயசுடா உனக்கு..."

பரிமளா அவன் தலையைக் கோதிவிடக் கையை அருகே கொண்டு போக, விருட்டென்று தலையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான்.

"நாளைக்கு இல்ல, இன்னும் ஒரு வருஷம் நீ கஷ்டப்பட்டாலும் ஒரு நாளைக்கு ஆறு ரூபா கூலிக்கு மேலே பார்க்க மாட்டே. இந்த ஆறு ரூபாயில் உங்கம்மாவுக்கு மூணு வேளை சோறு, துணிமணி, தங்கறதுக்கு எடம் எல்லாம் கெடைச்சிடும்னு நெனைக்கிறே? நீ சம்பாதிக்கறது உங்கம்மாவுக்கு வயிறுநிறைய சாப்பாடு போடக் கூடக் காணாது ராஜா. இதுவே நீ படிச்சுப் பெரிய மனுஷனா வந்தேன்னு வச்சுக்க, அம்மாவைப் பூப்போல் தாங்கலாம். சம்பாதிக்கறதையே விடு. இன்னொரு கேள்வி கேக்கறேன், பதில் சொல்லு...."

நந்தகுமார் ஒன்றும் பேசாமல் அவளை முறைத்தான்.

"நாளைக்கு நீயும் உங்கம்மாவும் நடந்து போய்க்கிட்டிருக்கறப்ப எவனாவது உங்கம்மா கையைப் பிடிச்சு இழுத்தா என்ன செய்ய முடியும் உன்னால?"

"என்ன பரிமளா நீ, கொழந்தைகிட்ட என்னென்னவோ பேசிக்கிட்டு...."

"அவன் கொழந்தை இல்லக்கா... சொன்னாப் புரிஞ்சுக்கற பெரிய மனுஷன்."

"எங்கம்மா கையை ஏன் இன்னொருத்தன் புடிச்சு இழுக்கணும்?"

"இழுத்தா நீ என்ன செய்வே? எதுத்து நிக்க முடியுமா உன்னாலே? தூக்கி எறிஞ்சிட்டுப் போய்டுவானுங்க. எங்க பாண்டி அண்ணன் மாதிரி ஓர் ஆள் இருந்தால் இந்தக் கையை இப்படி வீசினால் ரெண்டு பேரு விழுவான். அந்தக் கையை அப்படி வீசினால் ரெண்டு பேரு விழுவான்."

நந்தகுமாரின் நெஞ்சில் அந்த வார்த்தைகள் உலர்ந்த பூமியில் விழுந்த மழை நீர் போல் விர்ரென்று இறங்கின.

பழைய ஊரில் இருந்தபோது கடன் வசூலுக்கு வந்த கருப்பண்ணன், வீட்டு வாசலில் நின்று கத்தியபோது, நந்தகுமார் என்ன செய்தான்? கதவு மூலையில் பல்லி போல ஒண்டிக் கொண்டான். நடுவழியில் பஸ்ஸில் அம்மாவின் ட்ரங்க் பெட்டி, கூடை என்று

அபா

சகலமும் இறைக்கப்பட்டபோது, என்ன செய்தான்? விரிந்த கண்களுடன் பார்த்தான். இந்த நந்தகுமாருக்கு உடல் பலம் இல்லை. சத்தியமாய் இல்லை.

ஆஸ்பத்திரியில் இருந்தபோது நாள் தவறாமல் வந்து பார்த்துக் கொண்ட பாண்டிய மாமா ஒன்றும் மோசமில்லை. பாண்டிய மாமாவா, பாண்டிய அப்பாவா?

''யோசிச்சுப் பாரு, நந்தகுமாரு.... யோசிச்சுப் பாரு. நீ வளர்ந்து பெரியவனாகிறவரைக்கும் பாண்டி அண்ணன் மாதிரி ஒருத்தர் வீட்டில் இருந்தா ஒரு பய உங்களைத் தொந்தரவு பண்ண மாட்டான். வம்புக்கு அலைய மாட்டான். என்ன சொல்றே?''

நந்தகுமார் பதில் சொல்லாமல் பரிமளாவையே பார்த்தான். கண்களை மெல்லத் தாழ்த்திக் கொண்டான்.

''நீயே சாமி பூன்னு சொல்லி அம்மாகிட்டே கொடுக்கலை? உங்கம்மா பூவும் பொட்டும் வச்சுக்கிட்டா எவ்வளவு அழகா இருப்பாங்க, காலண்டர் லக்ஷ்மி மாதிரி? அதையா வேணாங்கறே?''

அதற்குமேல் நந்தகுமாரால் தாங்க முடியவில்லை. மெல்ல மடங்கி உட்கார்ந்தான். அம்மாவின் கன்னத்தைத் துடைத்தான்.

இருட்டு ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பூத்தன. 'நந்தகுமார், பதில் சொல்லு, பதில் சொல்லு' என்று குரல் கொடுத்தன. காதோரம் வருடிப் போகும் தென்றல், 'சீக்கிரம் சொல்லேன்' என்றது. காம்பவுண்ட் சுவர் ஓரம் வளர்ந்திருந்த தென்னைகள், ஓலைகளை அசைத்துத் தங்கள் பரபரப்பைத் தெரிவித்தன.

''ஆனா நான் வேலைக்குப் போறதை நிறுத்த மாட்டேம்மா...''

''அதை அப்புறம் பார்த்துக்கலாம். அம்மா விஷயம்?''

''இனிமேல் நான் **P.** நந்தகுமார்னு சொல்லிக்கறேன்.''

''என்னக்கா, உன் பிள்ளை என்னவோ சொல்றானே, எனக்குப் புரியலையே....''

இந்திராவின் கண்களில் இருந்து மேலும் இரு சொட்டுக் கண்ணீர் பிரிந்தது. பிறந்த வீட்டு உறவைப் பிரிந்து போகிற புதுமணப் பெண்ணின் கண்ணீர் போல ஆனந்தமும் தெரியாமல், துக்கமும் தெரியாமல் இருந்தது அந்தக் கண்ணீர்.

''என் பிள்ளை ஒத்துக்கறானாம் பரிமளா...'' இந்திரா மெல்லிய குரலில் சொன்னாள்.

பரிமளா நந்தகுமாரை வாரியணைத்து இரு கன்னங்களிலும் மாறி மாறி முத்தமிட்டாள்.

''அக்கா எங்க பாண்டி அண்ணனை இன்னிக்கே மொறைப்படி வந்து உங்க வீட்டில் பொண்ணு கேக்கச் சொல்றேங்க்கா.''

''உங்களுக்குமா புத்தி கெட்டுப் போச்சு?'' சுகந்தி ஜெயபாலிடம் இரைந்தாள். ''கல்யாணமாகித் தாலி அறுத்தவளுக்கு மறு கல்யாணமா? அதுவும் கன்னுக்குட்டி சைஸில் ஒரு புள்ளை வேறே....''

''சுகந்தி..... புரியாமப் பேசாதே சுகந்தி'' ஜெயபால் வெற்றிலையில் சுண்ணாம்பு தடவுவதை நிறுத்திவிட்டுத் தொடர்ந்தான். ''இந்திராவும் நந்தகுமாரும் இந்த வீட்ல அடி எடுத்து வச்சப்ப என்ன சொன்னே? ஒரே வாரத்தில இவங்களைக் காலி பண்ணிடணும்னு சொல்லலை....?''

''அதுக்காக? உங்க தங்கச்சிக்கு ஆனாலும் ரொம்பத் துணிச்சல்ங்க. எங்க வம்சத்தில இந்த மாதிரி பேச்செடுத்தாலே வெட்டிப் போட்டிருப்பாங்க....''

''காலம் ரொம்ப மாறிப் போயிடிச்சு, சுகந்தி. பழைய சோத்தை மறந்துட்டு, குமிட்டி அடுப்பை மறந்திட்டு, ப்ரெட் ஆம்லெட், காஸ் ஸ்டவ்னு வந்துட்டோம்....''

''ஆமா எடக்கு மடக்காப் பேசுங்க....''

''நான் ஒண்ணு சொன்னா கோச்சிக்க மாட்டியே?''

''என்னா?''

''நாளைக்கே நான் செத்துப் போயிட்டேன்னு வெச்சிக்க... உனக்கும், சசிக்கும் வேறே போக்கிடம் இல்லேன்னு ஒரு நெலைமை வந்தா....''

''ஐயோ... ஏன் இப்படில்லாம் பேசறீங்க.... சரி, நான் என்ன செய்யணும் சொல்லுங்க...''





"ஒண்ணும் செய்ய வேணும். நாத்தனாரை மணையில உக்கார வச்சு ஆசிர்வாதம் பண்ணு. போதும்..."

ஐயனார் சிலைக்குச் சற்றுத் தள்ளி, அம்மன் சன்னதியின் அருகாமையில் ஒரு தாற்காலிகப் பந்தல் போடப்பட்டது. குருத்துக் குலைகளுடன் வாழை மரங்கள் காவல் நிறுத்தப்பட்டன. மாவிலையும், தாழும் கீற்றும் காற்றுக்கு ஊஞ்சலாடின. உள்ளூர் நாதஸ்வரக் குழு கொடுத்த காசுக்கு இது போதும் என்று இழுத்தது. ஜெயபால் பட்டு வேட்டியில் இருந்தான். சுகந்தியின் பட்டுச் சேலை சூரியனைப் பிரதிபலித்தது. இதழ்களில் கட்டாயமாக வரவழைத்துக்கொண்ட புன்னகை. சசி பட்டுப் பாவாடை மண் தரையில் புரளாமல் தூக்கிப் பிடிப்பதிலேயே அதிக கவனமாயிருந்தாள்.

தலை நிமிராமல் இந்திரா மணையில் உட்கார்ந்திருக்க, ஓரக் கண்ணால் பக்கத்திலிருந்த பாண்டியன் அவளை அளவெடுத்துக் கொண்டிருந்தான்.

இந்த இந்திரா இதுவரை அவன் பார்த்திராத புது இந்திரா. முகத்தில் மஞ்சளின் தோய்ப்பு. நெற்றியில் பளிச்சென்ற சிவப்பு வட்டம். புதுப் புடைவையின் சரசரப்பு. அவள் முகத்தில் இருந்த உணர்ச்சியைப் புரிந்து கொள்வதுதான் கஷ்டமாக இருந்தது. சந்தோஷமா? துக்கமா? கவிதையா? கனவா? பயமா? பழைய நினைவுகளின் அலைக்கழிப்பா?

''கெட்டிமேளம்... கெட்டிமேளம்...''

தாலியை வாங்கிக் கொள்ளும்போது பாண்டியனின் கை லேசாக நடுங்கியது. இந்திராவின் கழுத்தில் அதை ஏற்றியபோது, பின்னால் கைகளை எடுத்துச் சென்று முடிச்சுப் போட முடியாமல் தவித்தான். பரிமளா இரண்டு கண்களிலும் ஏராளச் சிரிப்புடன் அவனுக்கு உதவினாள். இந்திராவின் கன்னத்தில் அழுத்தமாக முத்தமிட்டு, ''நல்லா இரு அக்கா'' என்று கண்களில் நீருடன் சிரித்தாள்.

''எங்கே என் ரெண்டாவது புருஷனைக் காணோம்?'' என்று நந்தகுமாரைத் தேடினாள்.

நந்தகுமார் கொண்டாட்டத்தில் பங்கு கொள்ளாமல் சற்று ஒதுங்கினாற்போல நின்றிருந்தான். முகம் வாட்டமாயிருந்தது. கண்களில் சிவப்பிருந்தது.

பாண்டியனின் வீடு கச்சிதமாயிருந்தது. இரண்டுபுறமும் திண்ணைகள். முற்றம். கூடம். கூடத்திற்குக் காவல் போல இந்தப் பக்கம் ஒரு சின்ன அறை. அந்தப் பக்கம் பெரிய அறை. பெரிய அறையை ஒட்டிச் சமையலறை.

இந்திரா பிடிவாதமாகத் தலையைக் குனிந்திருந்தாள். இடம் புதிது என்பது மட்டுமல்ல. தலை பின்னி விடுகிறேன் என்று சொல்லிப் பரிமளா இழுத்த இழுப்பிற்கு வளைந்து கொடுத்தபோது, அவள் காதோடு சொன்ன சில விஷயங்கள் கன்னங்களில் சிவப்பேற்றியிருந்தது. சீ, இந்தப் பெண்ணுக்கு வெட்கமேயில்லை, என்னவெல்லாம் பேசுகிறது!

கூடத்திலிருந்தே பெரிய அறை தெரிந்தது. கட்டில் தெரிந்தது. சிதறியிருந்த மல்லிகை இதழ்கள் தெரிந்தன. சுவரில் ஒரு சின்ன ரோஜா போல நைட்லாம்ப் பதிந்திருந்தது. நீலமாய் வெளிச்சம் சிரித்தது. இத்தனை ஆர்ப்பாட்டம் அவசியமா என்று ஓரத்தில் கேள்வி வந்தது.

பாண்டியன் திண்ணையில் உட்கார்ந்திருந்தான். தங்கராஜ் தலைவலி என்று சீக்கிரமே போய்விட்டிருந்தான். ஜெயபால், ''ஜாலியா இரு மாப்பிளே'' என்று சைக்கிளில் ஏறி மணியடித்துவிட்டுக் கிளம்பிவிட்டான். நந்தகுமார் எங்கே உட்கார்வது என்று புரியாதவன்போல, அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தான்.

''அக்கா, நான் வேணா நந்துவை என் கூட கூட்டிக்கிட்டுப் போயிடறேனே...''

''எதுக்குப் பரிமளா?''

''அவன் இங்கே என்ன பண்ணப் போறான்?''

''இன்னிக்குச் சரி... நாளைக்கு? நாளன்னைக்கு? நந்து இங்கேயே இருக்கட்டும். பரிமளா, நீ ராத்திரி இங்கேயே தங்கிடறியா?''

''சரிதான்... பாட்டுக்கச்சேரியா பண்ணப் போறே. உக்காந்து கேக்க. நீ ஒண்ணுக்கா, இந்தா, கண்ணாடியைப்பார்த்துக்கோ, எப்படி இருக்கே பார்த்துக்கோ...''

இந்திரா கண்ணாடியில் பார்த்தாள். நெற்றிச் சுட்டி, தணல் போல் ஜொலிக்கும் பொட்டு. தடாகக் கண்களில் மை விளிம்பு. துடிக்கும் உதடுகள்.

''பரிமளா... எனக்குப் பயமா இருக்கு பரிமளா....''

''உனக்கா... எதுக்குக்கா பயம்?''

''இந்த விஷயம் எம் மனசுக்குச் சரின்னு படலை பரிமளா...''

''நான் இருந்தேன்னா பயித்தியம் மாதிரி இப்படிப் பேசிட்டேதான் இருப்பே. நான் கௌம்பறேன்...''

''என்னை விட்டுப் போயிடாதே பரிமளா....''

''அதான் பாண்டி அண்ணன் வந்தாச்சே... இன்னும் உன்னை விட்டு நான் போகாமல் இருக்க முடியுமா.... என்னை நல்லாப் பாத்துக்க. அக்கா, இனிமே பாக்கறியோ இல்லையோ?''

''ஏய்... என்ன பரிமளா இது?''

''ஆமா, நாளைலேர்ந்து இந்தப் பரிமளாவோட நெனைப்பு எங்கே இருக்கப் போவுது? பக்கத்து வீட்டுப் பொம்பிளைங்ககூட கௌம்பிட்டாங்க. நான் வரேன்க்கா. அண்ணன் மனசு கோணாம நடந்துக்க...''

கிளம்பும்போது பாண்டியனிடம் காதோடு ஏதோ சொல்லி, அவன் கை நீட்டி அடிக்க முற்பட்டபோது, கன்றுக்குட்டி போல் துள்ளி ஓடினாள், பரிமளா.

''இருட்டில, தனியாப் போயிடுவியா பரிமளா?''

''இருட்டுக்கு என்ன பயம்? எமலோகம் வரைக்கும்கூடப் போய்ட்டு வருவேன்...''

பரிமளாவும் கிளம்பிப் போனபின், இந்திரா யோசித்து யோசித்து நந்தகுமாரை நெருங்கினாள். பாண்டியன் வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு உலாத்திக் கொண்டிருந்தான்.

''நந்து....''

''என்னம்மா?'' என்றான் உலர்ந்து போன குரலில்.

''தூக்கம் வரலே?''

''உன் மேலே காலைத் தூக்கிப் போட்டுக்கிட்டாதானம்மா எனக்குத் தூக்கம் வரும்? நம்ம ரெண்டு பேரும் எந்த ரூம்லம்மா படுத்துக்கப் போறோம்? தலைல போட்டிருக்கிற நகையெல்லாம் கழட்டி வச்சிட்டு வாம்மா, தூங்கலாம்....''

(தொடரும்)

** செய்திகளைத் தருவது மட்டும் நாளிதழ்களின் பணியல்ல. மக்களை உசுப்பிவிட்டு, 'நாம் ஏதேனும் செய்தாக வேண்டும்' என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்க வேண்டும்.

# SWAMIYE SARANAM AYYAPPA



ஸ்வாமியே சரணம் ஐயப்பா!

சபரிமலையில் பூஜைகளை நடத்திக் கொள்ளப் பொன்னான சந்தர்ப்பம்!

**சபரிமலை ஸ்ரீ ஐயப்பன் விபூதி பிரசாதம் திட்டம்:**

நீங்கள் 500 ரூபாய் சபரிமலை தேவஸ்வம் கமிஷனர் பேரில் தனலக்ஷ்மி வங்கி (பதிவுக் காரியாலயம்: திருச்சூர்)யின் எந்தக் கிளைகளில் ஒன்றிலாவது செலுத்தினால் ஸ்ரீ ஐயப்ப ஸ்வாமிக்கு விசேஷ அர்ச்சனை ஒவ்வொரு மாதமும் உங்கள் பெயரில் செய்து ஐந்து வருஷங்கள் நடத்தி. பிரசாதம் உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். சபரிமலை கோவில் ஒவ்வொரு மலையாள மாதம் 1லிருந்து 5ம் தேதிவரை திறந்திருந்து இந்நாட்களில் பூஜைகள் நடக்கும்.

**சபரிமலை ஸ்ரீ. ஐயப்பன் ஜன்ம நட்சத்திர பூஜைத் திட்டம்:**

தனலக்ஷ்மி வங்கியின் எந்தக் கிளையிலாவது 5000/– ரூபாய்க்கு நிரந்தர வைப்பு நிதியில், சபரிமலை தேவஸ்வம் கமிஷனர் பெயரில் பணம் செலுத்தி ஐந்து வருஷங்களுக்கு முதலீடு செய்தால் நீங்கள் குறிப்பிட்ட எந்த நாளிலும் – கோவில் திறந்திருக்கும் நாளில் விசேஷ பூஜைகள் நடத்தி, ஐந்து வருஷங்கள் தொடர்ச்சியாக நடத்தி, பிரசாதங்கள் உங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

மேலும் விவரங்களுக்குத் தயவு செய்து தனலக்ஷ்மி வங்கியின் கிளைகளில் ஒன்றில், அல்லது தேவஸ்வம் கமிஷனர், சபரிமலை, நிர்வாக அதிகாரி, சபரிமலைக்கு எழுதிப் பெறலாம்:

தேவஸ்வம் கமிஷனர்,
சபரிமலை திருவாங்கூர்,
தேவஸ்வம் போர்டு
திருவனந்தபுரம்

DEVASWOM COMMISSIONER
SABARIMALA, TRAVANCORE
DEVASWOM BOARD
TRIVANDRUM.

GAMAS

2



வாழ்க்கை வளம் பெற...

# சராசரி மனிதன் நிலையிலிருந்து மாமனிதன் நிலைக்கு...

மனவியல் அறிவில் ஒரு மகத்தான சிந்தனையாளர் மாஸ்லோ.

மற்றெல்லா மாணவர்களாலும் சேர்த்துக் கொள்ளப்படாத ஒரு யூதகுடும்பத்து இளைஞராகக் கல்வியைத் துவங்கினார் மாஸ்லோ. யூதர்களை அவ்வளவு தூரம் ஒதுக்கி வைத்தார்கள் அந்தக் காலத்தில். விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் புகழ் பெற்ற மனவியல் பேராசிரியரான வாட்சனிடம் படித்தார் மாஸ்லோ. அங்கே டாக்டர் பட்டம் பெற்றார். மனிதனது குணங்கள் எல்லாம் மனிதனது பழக்கவழக்கங்களிலிருந்து பிறந்தவை. பழக்கங்களை மாற்றினால் குணங்களை மாற்றிவிடலாம் என்ற அடிப்படையில் பிறந்தது வாட்சனின் அணுகுமுறை.

வாட்சனுடைய **Behaviourism** கொள்கைக்குமுன் பிராய்டின் கொள்கைகள் மனவியலை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. மனவியல் அறிவை ஒரு பாடமாக ஒழுங்கு படுத்தத் துவங்கியவர் பிராய்டு எனலாம். ஆகவே பிராய்டை 'மனவியலின் தந்தை' எனக் குறிப்பிடுகிறார்கள்.

பிராய்டு முக்கியமாக இரண்டு விஷயங்களைக் குறிப்பிட்டார். எப்படியாவது வாழ்ந்து விட வேண்டும் என்ற உயிர்த் துடிப்பும் தனது பாரம்பரியத்தை உருவாக்கிச் செல்லும் ஜீவத் துடிப்பும் அதனால் விளையும் உடலுறவு நாட்டமும் மனித வாழ்வை இயக்குகிறது என்று சொன்னார்.

அத்துடன் மனிதனுக்கு உணர்வுகளை வெளிப்படுத்தும் அடங்காத வெறி ஆழ் மனத்தில் தங்கி இருப்பதாகவும், அது புற உலகில், மனித சமுதாயத்தினால் ஏற்படுத்தப் பட்ட சட்ட திட்டங்களை மீறத் துடிப்பதனால் ஒரு நிரந்தரப் போராட்டம் மனிதனுக்குள் சதா நிகழ்ந்து கொண்டிருப்பதாகவும் சொன்னார்.

அவர் கூறியவற்றில் எவ்வளவோ உண்மைகள் இருக்கின்றன. இதன் விளைவாகப் பின்னால் வந்த மனவியல் அறிஞர்கள் மனிதனது போராட்டங்களை — அவனது கவலையை, துக்கத்தை, கோபத்தை, விரக்தியை— ஆராயத் துவங்கினார்கள்.

பிராய்டு ஓர் ஒரிஜினல் சிந்தனையாளர். எதையும், 'ஏன்? எப்படி?' என்று மூலத்திற்கே சென்று விவாதித்துப் பழைய கருத்துக்களைப் பாராட்டாமல் துணிவாகத் தம் வழியில் சென்றவர். பின்னால் வந்தவர்களில் பலர் அவர் அடியொற்றி மனிதனது அதீத நிலைகளை ஆராய்ந்தார்கள். பிராய்டை ஏற்றுக் கொண்டு அதே வழியில் சென்றார்கள்.

இந்தக் கட்டத்தில் மாஸ்லோ வந்தார். "மனிதர்களது மனநோய்களை ஆராய்வதானால் முதலில் நாம் ஆரோக்கியமான மனம் எப்படி இருக்கிறதென்று அறிந்து கொள்ள வேண்டும். அதன் இயல்புகள் என்ன? அது எப்படி இயங்குகிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். மனிதர்களிடம் உள்ள சிறந்த இயல்புகளை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். மகிழ்வு, நிறைவு, நிம்மதி, நகைச்சுவை, விளையாட்டு, நிறைவு தரும் உணர்வுகளின் உச்சநிலை — இவை பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டும்.



இன்று இதை நாம் புறக்கணிக்கிறோம். மனிதனிடம் காணும் அன்பு, நட்பு, தாராள மனப்பான்மை, தியாகம் போன்ற குணங்கள் மனிதனை மாமனிதனாக உயர்த்துகின்றன.

"நாம் சித்த பேதம் கொண்டவர்களையும், திருடர்களையும், விரக்தியாளர்களையும் மட்டும் ஆராய்வோமானால், மனித வளர்ச்சிக்குப் பதில் மனித சமுதாயத்தைத் தேக்கத்திற்கு அழைத்துச் சென்றவர்களாவோம். நமது மனவியல் ஒரு முடக்கப்பட்ட மனத்தின் விளைவுகளை விளக்குவதாக அமையுமே தவிர, ஓர் உயர்தரமான சர்வ வல்லமை படைத்த ஆரோக்கியமான மனத்தை விளக்கி, மனித சமுதாயத்திற்கு உதவுவதாகாது" என்று கூறினார்.

இப்படி அவர் மன இயல் சிந்தனைகளில் மீண்டும் ஒரு திருப்பு முனையை உருவாக்கினார்.

மனிதனது நடை உடை பாவனைகளைப்

பற்றிப் படித்து ஆராயும் மனவியல் பேராசிரியர்கள், சாதாரண மனிதர்களையே எடுத்துக் கொண்டார்கள். அதாவது மனித சமுதாயத்தின் சராசரி மனிதர்களை. பிராய்டின் வழிவந்தவர்கள் மனிதனது குறைகளை பயம், துக்கம், விரக்தி, வியாகூலம் — போன்ற உணர்வுகளில் கவனம் செலுத்தினார்கள். வாட்சனின் வழி வந்தவர்கள் சராசரி மனிதனின் சராசரி குணங்களை ஆராய்ந்தார்கள். புகழ் பெற்ற கின்சேயின் உடலுறவுகளைப் பற்றிய 'சர்வே'யும் இதை ஒட்டி வெளிவந்த ஆராய்ச்சிதான். "இதுதான் மனிதனது சராசரி வயது; இதுதான் மனிதனது சராசரிக் குணம்" என்று கண்டுபிடித்து அதற்கு ஏற்ப மனிதன் நடந்துகொண்டால் போதும் என்ற நிறைவை ஏற்படுத்தினார்கள்.

மாஸ்லோவோ, மனிதன் எப்படி இருக்கிறான் என்று பார்க்காமல், மனிதன் எப்படி இருக்க முடியும் என்பதை மாமனிதர்களை ஆராய்ந்து கண்டறிந்தார்.

நடை, உடை, பாவனைகளை ஆராயும் வாட்சன் வழி வந்தவர்கள் மிருகங்களைப் பொதுவாகத் தங்கள் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டார்கள். மிருகங்களிடையே நிகழும் போட்டியும், அடிதடியும், ஒன்றையொன்று கொல்லும் நிகழ்ச்சிகளும் அவர்களது ஆராய்ச்சிக்கு அடிப்படையாக இருந்தன. ஏனெனில் டார்வின் சித்தாந்தப்படி, "எது தகுதி உள்ளதோ, அதுதான் இவ்வுலகில் ஜீவிக்கிறது." இந்தக் கொள்கையின்படி, மிருகங்களின் போட்டி மனப்பான்மைதான் அவற்றின் வெற்றிக்குக் காரணமாக இருக்கிறதேயொழிய அவற்றிடையேநிலவிய அன்போ, ஒத்துழைப்போ அல்ல.

விஸ்கான்சினில் மாஸ்லோ குரங்குகளை வைத்து நடத்திய ஆராய்ச்சிகளில், குரங்குகளிடம் நிலவிய சுயநலம், ஆக்கிரமிப்பு போன்ற குணங்களைவிட அவற்றிடையே அன்பை அதிகம் கண்டார். ஒத்துழைப்பையும் கண்டார்.

பின்னர் மாஸ்லோ மனிதர்களையும் தமது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டார். அதிலும் உன்னதமான இயல்புகளைக் கொண்ட மாமனிதர்களை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டார். சராசரி மனிதர்களுக்குப் பதில், மனித இனத்தின் மேல் மட்ட உயர் மக்களின் அற்புத குணங்களை ஆராய்ந்தார். மனிதனால் எவ்வளவு முடியும், மனித சக்தி எவ்வளவு தூரம் செயல்படும், அவ்வளவு தூரம் செல்ல எது அவனைத் தூண்டுகிறது, ஏன் அவன் அதற்காகத் தன் உயிரைக் கூடப் பணயம் வைக்கிறான் என்றெல்லாம் ஆராய்ந்து மூல காரணங்களைக் கண்டறிந்தார்.



ராஜாஜி வாழ்க்கை வரலாறு
அடுத்த இதழில்.....

அவைதாம் இன்று மனவியல் பாடங்களிலும் தொழில் நிர்வாகம் போதிக்குமிடங்களிலும், சுய வளர்ச்சியில் ஆர்வமுள்ள எல்லா மக்களிடையேயும் பேசப்படும் 'மனிதத் தேவைகள்' என்ற மாஸ்லோவின் விளக்கம்.

எப்படி மனிதத் தேவைகள் படிப்படியாக உயர்கின்றன என்பதை வெகு அழகாக — துல்லியமாக விளக்குகிறார். அவை ஐந்து வகைப்படும்:

முதலாவதாக, மனிதன் அடிப்படைத் தேவைகளில் கவனம் செலுத்துகிறான். உணவு, உடை, குடியிருக்க இடம் என உயிர் வாழ்வதற்குத் தேவையான அடிப்படைகள்.

இரண்டாவதாக மனிதன் பாதுகாப்பை நாடுகிறான். மிருகங்களிடமிருந்து பாதுகாப்பு, எதிரிகளிடமிருந்து பாதுகாப்பு, இடி, மின்னல், மழை போன்றவற்றிலிருந்தும் பயங்களிலிருந்தும் பாதுகாப்பை நாடுகிறான்.

மூன்றாவதாக மனிதன் சமுதாயத்தின் ஒரு பகுதியாகப் பிறரால்தான் ஏற்றுக்கொள்ளப்படுவதை — பிறரால் அங்கீகரிக்கப்படுவதை — விரும்புகிறான். பத்திரிகையாளன் நான், பாராளுமன்ற உறுப்பினன் நான்' என்று சமுதாயத்தின் ஒரு பகுதியாகத் திகழ்வதில் நிறைவு காண்கிறான். மனிதன் முயற்சி எடுத்துச் சங்கங்கள் அமைப்பதற்கெல்லாம் இதுதான் காரணம்.

நான்காவதாக, தனது திறமைகளுக்காகச் சமுதாயத்தால் தான் ஏற்றுக் கொள்ளப்படுவதை, பாராட்டப்படுவதை அவன் மனம் அவாவுகிறது. அதற்காக ஏங்கவே செய்கிறது. மனித மனத்தின் அடிப்படை இயல்பாக இது இருக்கிறது.

ஐந்தாவதாக மனிதன் தன் முழுத்திறமைகளையும் அறிவையும் வெளிக்கொணர்ந்து, தான் மேற்கொண்ட லட்சியத்தை அடைந்து அதில் நிறைவு காண்கிறான். ஒரு ஜீவனின் பூரணத்துவம் எதுவோ, எவ்வளவு தூரம் அதை அடைய முடியுமோ அவ்வளவையும் அடைந்து நிறைவு காணும் மனம் அடிப்படையிலே இருந்து, மனிதனை இயக்குகிறது.

இவை மாஸ்லோவின் ஆராய்ச்சி முடிவுகள். சிந்தித்துப் பார்க்க இங்கே நிறைய விஷயங்கள் இருக்கின்றன. இவைதாம் கடைசி உண்மைகள் என்று நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை. ஆனால் ஒவ்வொன்றையும் எடுத்துக் கொண்டு, உங்கள் வாழ்க்கை அனுபவங்களுடன் ஒப்பு நோக்கி ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள். ஆராய்ந்து பாருங்கள்.

— டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# ஆபாசத்தைக் கடைசிவரை எதிர்த்தவர்!



லக்ஷ்மி தென்னாப்பிரிக்காவிலிருந்த சமயம். தமது தொடர்கதையின் அத்தியாயங்களை ஆனந்த விகடனுக்குத் தபாலில் அனுப்பிக் கொண்டிருந்தார். தபால் தாமதங்கள் காரணமாகச் சில வாரங்கள் கதைப் பகுதி இடம் பெறாமலேயே போகும். அப்போது வாசகர்கள் பட்டபாடு! அவர்கள் மனங்கள் அடைந்த ஏக்கம்!

இது நடந்து பல வருடங்கள் ஆகிவிட்டன. கிட்டத்தட்ட ஐம்பது வருடங்களாக வாசகர்களை மகிழ்வித்து வந்தார் லக்ஷ்மி. இதில் அதிசயம் என்னவென்றால் அவருடைய ஆரம்பக் கால 'காஞ்சனையின் கனவை' எவ்வளவு ஆர்வத்துடன் வாசகர்கள் படித்தார்களோ அதே ஆர்வத்துடன் அவர் கடைசி கடைசியாக எழுதியவற்றையும் படித்தார்கள்.

லக்ஷ்மியின் இந்த அபார வெற்றிக்குக் காரணம் என்னவென்று கேட்டால், சமுதாய வளர்ச்சிக்கும் மக்களின் மன வளர்ச்சிக்கும் ஏற்ப அவர் எழுத்து வளர்ச்சி அடைந்து வந்ததுதான் என்று சொல்லலாம்.

ஆனால் புதுமை, புத்தலை என்று கூறிக்கொண்டு, நமது பண்பாடுகளுக்கு ஒவ்வாத வகையில் எழுதுவது அவருக்குத் தெரியாத ஒன்று. ஆபாசங்களை, அருவருப்பான மன வக்கிரங்களைப் பற்றி அறியாதவர் அல்ல லக்ஷ்மி. நோயுற்ற மனித மனங்களின் எத்தனையோ விதமான விகாரங்களை அவர் டாக்டர் என்ற முறையில்- நேரில் கண்டுமிருப்பார். அவை பற்றி விஞ்ஞான ரீதியாக நிறையப் படித்தும் இருப்பார்—மற்றவர்களைப் போல் அரைகுறையாக அன்று, முழுமையாகத் தெரிந்து கொண்டிருப்பதாலேயே அவற்றைத் தம் எழுத்தில் தவிர்த்தும் வந்தார். டாக்டராகிய அவர், தம் எழுத்து, வாசகர்களின் மன ஆரோக்கியத்தைப் பாதித்துவிடக் கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பார்.

எப்போதும் சாந்தமாக, இனிமையாகப் பேசிக் கொண்டிருப்பார் லக்ஷ்மி. ஆபாச எழுத்து பற்றி உரையாடல் திரும்பி விடுமானால் மட்டும் அவர் ஒரேயடியாகக் கோபமடைந்து முகம் சிவக்கப் படபடப்பார்.

ஆரோக்கியமான எழுத்து மூலமே வாசகர்களைக் கவர முடியும், ஆபாசம் அவசியமில்லை என்று திரும்பத் திரும்ப நிரூபித்தவர் லக்ஷ்மி. அவர் கையாண்ட மார்க்கம் கடினமானது: நிறைய உழைப்பைக் கோருவது. அதற்கு அவர் என்றுமே தயங்கியதில்லை. கதை சொல்லும் உத்தியால், பாத்திரப் படைப்புத் திறனால், உணர்ச்சிகளை வெளியிடும் பாங்கால், 'சஸ்பென்ஸ்' ஸோடு நிகழ்ச்சிகளை உருவாக்கிக்கோக்கின்றலாகவத்தால், எழுத்தின் நடையழகால் வாசகர்களைக் கவர்ந்தவர். அவரது பாத்திரப் படைப்பின் அழுத்தத்திற்கு உதாரணமாக ஒரு சம்பவம் சொல்லலாம். ஷெர்லாக் ஹோம்ஸை ஒரு கதையில் 'கொன்று' விட்ட எழுத்தாளர் கானன்டாயில், வாசகர்களின் கோபத்துக்கு ஆளாகி, அதைச் சமாளிக்க முடியாமல் அடுத்த கதையில் அவனை உயிர்ப்பித்தார்! அதைப் போலவே லக்ஷ்மி பூக்குழி என்ற தொடரைக் கல்கியில் எழுதிக் கொண்டிருந்த சமயம், கதாநாயகன் ராஜ்குமார் இறந்துவிட்டான் என்ற கட்டத்தில் வாசகர்கள் அடைந்த வேதனையை — படபடப்பைச் சொல்லி முடியாது! ராஜ்குமார் மட்டும் உயிருடன் திரும்பியிருக்காவிட்டால் வாசகர்கள் லக்ஷ்மியை மன்னித்தே இருக்கமாட்டார்கள். அவர் வீடு நோக்கிப் படை எடுத்திருந்தாலும் வியப்பதற்கில்லை!

அமரர் கல்கி தமிழகத்துக்குக் கண்டு பிடித்துக் கொடுத்த எண்ணற்ற எழுத்தாளர்களுள் லக்ஷ்மியும் ஒருவர். "நான் முதன் முதலில் ஒரு சிறுகதை எழுதி ஆனந்த விகடனுக்கு அனுப்பினேன். அதைப் படித்துவிட்டு, கதை பிரசுரமாவதற்கு முன்பே ஒரு பாராட்டுக் கடிதம் எழுதினார் கல்கி. அந்தக் கடிதம்தான் என்னை மேன்மேலும் எழுதத் தூண்டியது" என்று பல சந்தர்ப்பங்களில் கூறியுள்ளார் லக்ஷ்மி.— கி. ராஜேந்திரன்

படம்: மகேஷ்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032.

Editor: K. Rajendran

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034. (Phone: 473389)

*Administrative Office:* Race Course Road, Guindy, Madras-600 032 (Phones: 431543, 434157 Press: 434190)

